வேலுண்டு துன்பம் விளைந்ததெனில் • மாமயிலோன்
காலுண்டு கூற்றுவந்தக் கால்.

# தொல்காப்பியம்.

## இளம்பூரணம்.



# எழுத்ததிகாரம்.

## பதவுரை.



வ. உ. சிதம்பரம் பிள்ளை,

பதிப்பாசிரியன்.



வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி.

உ

# தொல்காப்பியம்.

## இளம்பூரணம்.



### பதிப்புரை.

"தொல்காப்பியம்" என்னும் இந்நூல் தமிழ் மொழிக்குத் நிலையாக விளங்கும் ஒப்புயர்வற்ற ஓர் இலக்கணம், இஃது அகத்தியனது பன்னிரு மாணாக்கருள் "திரணதூமாக்கினி" என்னும் இயற்பெயரினையும், "பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர் நல்லிசை நிறுத்த தொல்காப்பியன்" என்னும் புகழ்ப்பெயரினையும் கொண்டு விளங்கிய ஓர் முனிவனால் இயற்றப்பெற்றது. இதற்கு முதல் நூல் அகத்தியனால் இயற்றப்பெற்ற "அகத்தியம்" என்ப. இந்நூல் பன்னீராயிரம் வருஷங்களுக்குமுன் இயற்றப்பெற்றதென வீரசோழியத்தின் பதிப்புரையில் திருமன். சி. வை. தாமோதரம்பிள்ளை நிலைநாட்டியுள்ளனர்.

ஆண், பெண், அலிகளை ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால் விகுதிகளால் உணர்த்துவது தமிழ்மொழி ஒன்றே. ஆண்பால் விகுதியைப் பொருந்தி ஆணைக்குறியாமலும், பெண்பால் விகுதியைப் பொருந்திப் பெண்ணைக் குறியாமலும், ஒன்றன்பால் விகுதியைப் பொருந்தி அலியைக் குறியாமலும்நிற்கும்சொற்கள் ஆரியம் முதலிய மொழிகளில் எண்ணில உண்டு. உயர்திணை, அஃறிணை என்னும் தமிழ் இலக்கணப்பாகுபாடு ஆரியம் முதலியவற்றில் இல்லை. நிலத்தின் பாகுபாடுகளையும், அவற்றின் உரிப்பொருள், கருப்பொருள்களையும், அவற்றின் மக்களது ஒழுக்கங்களையும் கூறுவது தமிழ் இலக்கணம் ஒன்றே.

இவ்வகைத் தனிச் சிறப்புப்பொருந்திய இத்தமிழ் இலக்கணத்துள்ளும் ஆரியமொழிகள் சிலவற்றையும், ஆரியர் பழக்க வழக்கங்கள் சிலவற்றையும், ஆரியர் கொள்கைகள் சிலவற்றையும், இந்நூலாசிரியன் நுழைத்திருத்தலை ஆங்காங்குக் காணலாம். ஆயினும், தமிழ் மக்களின் முற்காலப் பழக்க வழக்க ஒழுக்கங்களும், தமிழ் மொழியின் நேர்மையும் மாண்பும் ஏற்றமும் இந்நூலின்கண் தெற்றெனக் காணலாகும். இந்நூலின் எழுத்ததிகாரச் சொல்லதிகாரச் சூத்திரங்களைக் கற்போர் நன்னூலாதியவற்றைப் புனனூலாதியனவாகக் காண்பரென்பது திண்ணம்.

இந்நூற்கு உரை எழுதினோர் இளம்பூரணர், கல்லாடர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், சேனாவரையர் என்னும் ஐவர். இவருள் இளம்பூரணரும், பேராசிரியரும் இந்நூலின் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம்

என்னும் மூன்றதிகாரங்களுக்கும் உரை இயற்றியுள்ளார்கள். கல்லாடர் எழுத்ததிகாரத்திற்கும் சொல்லதிகாரத்திற்கு மாத்திரம் உரையெழுதியிருப்பதாகவும், சேனாவரையர் சொல்லதிகாரத்திற்கு மாத்திரம் உரையெழுதியிருப்பதாகவும் தெரிகிறோம். அவ் வைந்துரைகளும் முறையே இளம்பூரணம், கல்லாடம், பேராசிரியம், நச்சினார்க்கினியம், சேனாவரையம் என வழங்குகின்றன.

இவ்வுரைகளில் நச்சினார்க்கினிய எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் தனித்தனியே அச்சாகி வெளிவந்துள்ளன. நச்சினார்க்கினியப் பொருளதிகாரமும், பேராசிரியப் பொருளதிகாரமும் கலந்து அச்சாகி வெளிவந்துள்ளன. பேராசிரியச் சொல்லதிகாரம் கரந்தை தமிழ்ச்சங்கத்தாரால் அச்சிடப்பெற்று முடிந்து விரைவில் வெளிவரும் நிலைமையில் இருக்கின்றது. இளம்பூரணம் எழுத்ததிகாரம் பல ஆண்டுகளுக்கு முன்னர்ப் பூவிருந்தவல்லிக் கன்னியப்ப முதலியாரால் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது. அவ்வெழுத் ததிகாரத்தைப் பல ஏட்டுப் பிரதிகளோடு ஒப்பிட்டுப்பார்த்துத் திருத்தி யான் இப்பொழுது அச்சிட்டு வெளிப்படுத்துகின்றேன். இளம்பூரணம் பொருளதிகாரம் அகத்திணையியலும் புறத்திணையியலும் முன்னரே அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளேன். சொல்லதிகாரமும் பொருளதிகாரத்தின் பிந்திய இயல்களும் விரைவில் அச்சிட்டு வெளியிடப்பெறும்.

இளம்பூரணரே முதல் உரையாசிரியர். அவர் "உரையாசிரியர்" எனவே யாவராலும் வழங்கப்படும் பெருமைவாய்ந்தவர். அவர் மூன்று அதிகார உரைகளுள்ளும் எழுத்ததிகாரவுரை "எழுத்திற்கு இளம்பூரணம்" என்று யாவராலும் புகழப்பெறறது. கற்போர் எளிதில் உணருமாறு பொருட்டொடர்புநோக்கிச் சூத்திரச்சொற்களையும் அவற்றின் பொருட்சொற்களையும் பிரித்தும திருத்திப் படித்தற்குரிய அடையாளங்களிட்டும பதிப்பித்துள்ளேன். ஒவ்வோரிடத்தில் பாட வேறுபாடும், உரைவேறுபாடும சேர்த்துள்ளேன். எனது சேர்ப்பிற்கு முன்னும் பின்னும் முறையே [ ] இக்குறிகள் இட்டுள்ளேன்.

இவ் வெழுத்ததிகாரத்தையும் பொருளதிகாரத்தையும் 1920-ம் வருடத்தில் அச்சிடத் தொடங்கினேன். பொருளதிகாரம் அகத்திணையியல் புறத்திணையியல்கள் முன்னரே அச்சாகி வெளிவந்துள்ளன. இஃது இப்பொழுது வெளிவருகின்றது. பொருளதிகார வேனைய இயல்களும் சொல்லதிகாரமும் விரைவில் வெளிவரும்.

கோவில்பட்டி,
1—6—1928.

வ. உ. சிதம்பரம் பிள்ளை.

# தொல்காப்பிய எழுத்ததிகாரச் சூத்திர அகராதி.

## தொல்காப்பிய எழுத்ததிகாரச் சூத்திர அகராதி.

| சூத்திரம் | பக்கம். | சூத்திரம். | பக்கம். |
|---|---|---|---|
| வன்றொடர் மொழிய | ௱௩௮ | வேற்றுமை யல்வழி யாய் | ௱௨௭ |
| வஃகான் | ௪௩ | வேற்றுமை வழிய | ௪௧ |
| வாழிய வென்னு | ௭௭ | வேற்றுமைக் குக்கெட | ௱௩ |
| விசைமரக் கிளவியு | ௯௭ | வேற்றுமை யாயி | ௱௰௭ |
| விண்ணென | ௱௪ | வேற்றுமை யாயி னேனை | ௱௰௨ |
| வினையெஞ்சு கிளவிக்கு | ௯௩ | வேற்றுமை யல்வழி யெண் | ௱௫ |
| வினையெஞ்சு கிளவியு | ௭௪ | வேற்றுமை - ஒகர | ௱ |
| வெயிலென் கிளவி | ௱௨௭ | ழகர வுகர | ௯௨ |
| வெரிநெ னிறுதி | ௱௩ | ழகார விறுதி | ௱௨௮ |
| வேற்றுமை குறித்த | ௪௰ | ளகார விறுதி | ௱௩௧ |
| வேற்றுமை | ௭௯, ௮௨, ௯௰, ௯௧, ௯௩, ௯௬ | னகார விறுதி | ௱௰௩ |
| வேற்றுமைக் கண்ணும் | ௫௨ | னகார விறுவாய் | ௯ |
| வேற்றுமை யல்வழி | ௫௭ | னகார முன்னர் | ௨௧ |
| வேற்றுமை யல்வழிக்குறு | ௱௨௰ | னஃகான் | ௪௪ |

| பக்கம். | இயலகராதி. | சூத்திரத்தொகை. |
|---|---|---|
| ௭௪ | உயிர்மயங்கியல் | ௯௩ |
| ௬௪ | உருபியல் | ௩௰ |
| ௱௩௫ | குற்றியலுகரப்புணரியல் | ௭௭ |
| ௫௰ | தொகைமரபு | ௩௰ |
| ௬ | நூன்மரபு | ௩௩ |
| ௩௰ | பிறப்பியல் | ௨௧ |
| ௩௯ | புணரியல் | ௪௰ |
| ௱௨ | புள்ளிமயங்கியல் | ௱௰ |
| ௰௬ | மொழிமரபு | ௪௯ |

ஆக இயல் ௯-க்குச் சூத்திரம்---௪௮௩.

பாயிரம் சூத்திரம். ௧.

ஆக சூத்திரம் – ௪௮௪.



# தொல்காப்பியம்

## இளம்பூரணம்



### சிறப்புப்பாயிரம்

வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச்
செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்
நிலந்தரு திருவிற் பாண்டிய னவையத்
தறங்கரை நாவி னான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற் கரிறபத் தெரிந்து
மயங்கா மரபி னெழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பி னைந்திர நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே.

எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்கவென்பது மரபு. என்னை? "ஆயிர முகத்தா னகன்ற தாயினும் பாயிர மில்லது பனுவ லன்றே" என்பவாகலின். பாயிரமென்பது புறவுரை. அது நூற்குப் புறவுரையேல் அதுகேட்டு என்னை பயனெனின், கற்றுவல்ல கணவர்க்குக் கற்புடையாள்போல இன்றியமையாச் சிறப்பிற்றாயும் திருவமைந்த மாநகரத்திற்கு உருவமைந்த வாயின்மாடம் போல அலங்காரமாதற் சிறப்பிற்றாயும் வருதலானும், பாயிரங்கேளாதே நூல் கேட்குமேயெனில் குறிச்சிபுக்க மான்போல மாணாக்கன் இடர்ப்படுமாகலானும், பாயிரங்கேட்டல் பயனுடைத்தாயிற்று. அப்பாயிரம் பொதுவும் சிறப்பும் என இருவகைத்து. எல்லா நூன்முகத்தும் பொதுவாக உரைக்கப்படுதலிற் பொது வெனப்பட்டது. "ஈவோன்றன்மை" முதலிய நூலுட்சொல்லும் பொருளல்லாப் புறப்பொருளைக் கூறும் பொதுப்பாயிரம் போலாது, நூலகத்தெல்லாம் பயந்தன் மாத்திரையேயன்றி அந்நூலிற் சொல்லப்படுகின்ற பொருள்முதலிய உணர்த்தலின், அணியிழை மகளிர்க்கு அவ்வணியிற் சிறந்த ஆடைபோல நூற்குச் சிறந்தமையாற் சிறப்பெனப்பட்டது.

அவற்றுள், பொது நால்வகைத்து. "ஈவோன் றன்மை யீத லியற்கை, கொள்வோன் றன்மை கோடன் மரபென, ஈரைந் தென்ப பொதுவின் றொகையே." இதனான் அறிக.

ஈவோர் கற்கப்படுவோரும் கற்கப்படாதோரும் என இருவகையர். கற்கப் படுவோர் நான்கு திறத்தான் உவமம் கூறப்படுவர். "மலைநிலம் பூவே துலாக்கோ லென்றின்னர், உலைவி லுணர்வுடை யார்." இதனான் அறிக.

இனிக் கற்கப்படாதார்க்குக் கூறும் உவமமும் நால்வகைத்து. "கழற்பெய் குடமே மடற்பனை முடத்தெங்கு, குண்டிகைப் பருத்தியோ டிவையென மொழிப." இதனான் அறிக.

ஈதலியற்கை: "ஈத லியல்பே யியல்புறக் கிளப்பிற், பொழிப்பே யகல நுட்ப மெச்சமெனப், பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன், புகழ்ந்த மதியிற் பொருந்து மோரையிற், றெரிந்த வறிவினன் றெய்வம் வாழ்த்திக், கொள்வோ னுணர்வகை அறிந்தவன் கொள்ளக், கொடுத்தன் மரபெனக்கூறினர் புலவர்." இதனான் அறிக.

கொள்வோர் கற்பிக்கப்படுவோரும் கற்பிக்கப்படாதோரும் என இரு வகையர். கற்பிக்கப்படுவோர் அறுவகையர். அவர்தாம் "தன்மக னாசான் மகனே மன்மகன், பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே, யுரைகோ ளாளனோ டிவ ரென மொழிப." இதனான் அறிக. இவர்தன்மை: "அன்னங் கிளியே நன்னிற நெய்யரி, யானை யானே றென்றிவை போலக். கூறிக்கொள்ப குணமாண் டோரே." இதனான் அறிக. இனிக் கற்பிக்கப்படாதார் எண்வகையர். "மடிமானி பொச்சாப்பன் காமுகன் கள்வன், அடுநோய்ப் பிணியாள னாறுசினத்தன், தடுமாறு நெஞ்சத் தவ னுள்ளிட் டெண்மர், நெடுநூலைக் கற்கலா தார்." இதனான் அறிக. இவர்தன்மை: "குரங்கெறி விளங்கா யெருமை யாடே, தோணி யென்றாங் கிவையென மொழிப." இதனான் அறிக.

கோடன்மரபு: "கொள்வோன் முறைமை கூறுங் காலைப், பொழுதொடு சென்று வழிபடன் முனியான், முன்னும் பின்னு மிரவினும் பகலினும், அகலா னாகி யன்பொடு புணர்ந்தாங், காசற வுணர்ந்தான் வாவென வந்தாங், கிருவென விருந்தே டவிழென வவிழ்த்துச், சொல்லெனச் சொல்லிப் போவெனப் போகி, நெஞ்சுகள னாகச் செவிவா யாகக், கேட்டவை கேட்டவை வல்ல னாகிப், போற்றிக் கோட லதனது தொழிலே"; "எச்சிறந் தாசானுவக்கு மத்திறம், அறத்திற்றிரியாப் படர்ச்சி வழிபாடே"; "செவ்வன் றெரிகிற்பான் மெய்ந்நோக்கிக் காண்கிற்பான், பல்லுரையுங் கேட்பான் புகப்பெரிதுங் காதலான், தெய்வத்தைப் போல மதிப்பான் றிரிபில்லான், இவ்வாறு மாண்பு முடையாற் குரைப்பவே, செவ்விதி னூலைத் தெரிந்து"; "வழக்கி னிலக்கண மிழுக்கின் றறிதல், பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல், ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல், அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல், வினாதல் வினாயவை விடுத்த லென்றிவை, கடனாக் கொளினே மடநனி யிகக்கும்"; "அனைய னல்லோன் கொள்குவ னாயின், வினையி னுழப்பொடு பயன்றலைப் படாஅன்". இவற்றான் அறிக. இவ்வாறு கோடன் மரபுடைய மாணாக்கன் நூன் முற்ற அறிந்தானுமாறு: "ஆசா னுரைத்தவை யமைவரக் கொளினுங், காற்கூ றல்லது பற்றல னாகும்"; "அவ்வினை யாளரொடு பயில்வகை யொருபால், செவ்விதி னுரைப்ப வவ்விரு பாலும், மையறு புலமை மாண்புநனி யுடைத்தே." இவற்றான் அறிக.

# சிறப்புப்பாயிரம்

சிறப்புப் பதினொருவகைத்து: "ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை, நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே, கேட்போர் பயனோ டாயெண் பொருளும், வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே"; "காலங் களனே காரண மென்றிம், மூவகை யேற்றி மொழிநரு முளரே". இவற்றான் அறிக. இனி, அச்சிறப்பிலக்கணம் செப்புமாறு: "பாயிரத் திலக்கணம் பகருங் காலை, நூனுதல் பொருளைத் தன்னகத் தடக்கி, ஆசிரியத் தானும் வெண்பா வானு, மருவிய வகையா னுவறல் வேண்டும்". இதனான் அறிக.

நூல் செய்தான் பாயிரம் செய்வானல்லன், "தோன்றா தோற்றித் துறை பல முடிப்பினுந், தான்றற் புகழ்தல் தகுதி யன்றே" என்பவாகலின். பாயிரம் செய்வார் தன் ஆசிரியனும். தன்னொடு ஒருங்கு கற்ற மாணாக்கனும். தன் மாணாக்கனும் என மூவகையர். அவருள் இந்நூற்குப் பாயிரம் செய்தார் தன்னோடு ஒருங்கு கற்ற பனம்பாரனார்.

இ-ள் :—வடவேங்கடம் தென்குமரி ஆ இடைத் தமிழ் கூறும் நல் உலகத்து வழக்கும் செய்யுளும் ஆ இருமுதலின்-வடக்கின்கண் உளதாகிய வேங்கடமும் தெற்கின்கண் உளதாகிய குமரியு மாகிய அவற்றை எல்லையாக உடைய நிலத்து வழங்கும் தமிழ்மொழியினைக் கூறும் நன்மக்களான் வழங்கும் வழக்கும் செய்யுளுமாகிய இருகாரணத்தானும். எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி-எழுத்திலக்கணத்தினையும் சொல்லிலக்கணத்தினையும் பொருளிலக்கணத்தினையும் ஆராய்ந்து, செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு முந்துநூல் கண்டு-(அவ்வாராய்ச்சியிற் குறைபாடுடையவற்றிற்குச்) செந்தமிழினது இயல்பு பொருந்தின செந்தமிழ் நிலத்து வழக்கோடு முதல்நூல்களிற் சொன்னவற்றினைக் கண்டு, முறைப்பட எண்ணி-அவ்விலக்கணம் முறைப்பட ஆராய்ந்து, நிலம் தரு திருவின் பாண்டியன் அவையத்து-மாற்றாது நிலத்தினைத் தன்கீழ் வாழ்வார்க்குக் கொண்டுகொடுக்கும் போர்த்திருவினையுடைய பாண்டியன் மாகீர்த்தியது அவைக்கண்ணே, அறம் கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டு ஆசாற்கு-(அவ்வவையுள்ளார்க் கேற்பத் தெரிந்தே நின்ற) மெய் சொல்லும் நாவினையுடைய நான்குவேதத்தினையும் முற்றவுணர்ந்த அதங்கோடென்கின்ற ஊரின் ஆசானுக்கு, அரில் தப தெரிந்து-கடா அறத் தெரிந்துகூறி. மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி-(அவ்வெழுத்தும் சொல்லும் செய்கின்றுழி முன்னைநூல்போல எழுத்திலக்கணம் சொல்லுட்சென்று) மயங்காத முறைமையானே எழுத்திலக்கணத்தினை வேறு தெரிவித்து, மல்கு நீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் என தன் பெயர் தோற்றி-(அவ்வாறு செய்கின்றுழி) மிக்க நீரையுடைய கடலாகிய எல்லையையுடைய வுலகின்கண்ணே, இந்திரனாற் செய்யப்பட்ட ஐந்திரவியாகரணத்தினை நிறைய அறிந்த பழையகாப்பியக்குடியினுள்ளோனெனத் தன் பெயரைத் தோற்றுவித்து, போக்கு அறு பனுவல்-நூற்குச் சொல்லப்பட்ட குற்றங்களற்ற தன்னூலுள்ளே, புலம் தொகுத்தோன்-அவ்விலக்கணங்களைத் தொகுத்துக்கூறினான், (அவன் யாரெனில்,) பல் புகழ் நிறுத்த படிமையோன்-(தவத்தான்வரும்) பல்புகழ்களை உலகிலே நிறுத்தின தவவொழுக்கத்தினையுடையான்.

வழக்கும் செய்யுளும் ஆ இரு முதலின் எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி முறைப்பட எண்ணி, பாண்டியன் அவையத்து அதங்கோட்டு ஆசாற்கு அரில்தபத்

தெரிந்து, எழுத்திலக்கணத்தைச் சொல்லும் முறைமை மயங்கா மரபிற் காட்டி, தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்றி, பனுவலுள் புலந்தொகுத்தோன் படிமையோன் எனக்கூட்டுக.

வடவேங்கடந் தென்குமரி யெனவே, எல்லை பெறப்பட்டது. வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலி னெனவே, நூல் நுதலியதூஉம் பயனும் பெறப் பட்டன. முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி யெனவே, வழியும் யாப்பும் காரணமும் பெறப்பட்டன. பாண்டிய னவையத் தெனவே, காலமுங் களனும் பெறப்பட்டன. அதங்கோட்டாசாற் கரிறபத் தெரிந் தெனவே, கேட்டோர் பெறப்பட்டது. தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்றியெனவே, ஆக்கியோன் பெயரும் நூற்பெயரும் பெறப்பட்டன.

மங்கலத் திசையாகலின், வடக்கு முன்கூறப்பட்டது. கடல்கொள்வதன் முன்பு பிறநாடும் உண்மையின், தெற்கும் எல்லைகூறப்பட்டது. கிழக்கும் மேற்கும் பிறநாடு இன்மையின், கூறப்படா வாயின. பிற இரண்டெல்லை கூறாது இம்மலையும் ஆறும் கூறியது, அவை தீர்த்தமாகலானும் கேடிலவாதலானும் எல்லாரானும் அறியப் படுதலானுமென்பது. இவை அகப்பாட்டெல்லை.

ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகத்தென்றது, அவ்வெல்லைத் தமிழ்கூறும் நல்லாசிரியரது என்றவாறு. நல்லாசிரியர்-அகத்தியனார் முதலாயினோர். உலகமென்பது ஆசிரியரை. அது என்றது ஆகுபெயரான், அவற்றை எல்லையாகவுடைய நிலத்தினை. இடையென்பது ஏழாமுருபு. முறைப்பட வெண்ணி யென்றது, அம்மூன்று நூல்களில் ஒன்றற் குரிய இலக்கணத்தினை ஒன்றன் இலக்கணத்தோடு ஆராய்ந்தாற்போல ஆராயாது முறைப்பட ஆராய்ந்து என்றவாறு. மற்று, நூல் செய்யும் இலக்கணமெல்லாம் இந்நூலுட்படச் செய்தானென்பது, இம்முறைப்பட வெண்ணி யென்றதனாற் கொள்க. அவையாமாறு; "ஒத்தே சூத்திர மெனவிரு வகைய", "நேரின மணியை நிரல்பட வைத்தாங், கோரினப் பொருளை யொருவழி வைப்ப, தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்" [செய்யுளியல்-௧௭௧]; "நுட்ப மொட்பந் திட்பஞ் சொல்லிற், சுருக்கங் கருத்துப் பகுதியொடு தொகைஇ, வருத்தாகில் பொருட்பய னிகழ்ச்சி சூத்திரம்"; "பொதுவினுஞ் சிறப்பினும் போற்றுங் காலைப், பெறுதல் பெற்றவை காத்தல் காப்பொடு, பிறிதுபெற நிகழ்த்த லதன் கருத் தாகும்"; "அதுவே, பிண்டந் தொகைவகை குறியே செய்கை, கொண்டியல் புறனடை யென்றதன் விகற்பமொ, டொன்றிய குறியே யொன்று மென்ப"; "ஆற்றொழுக்கே தேரைப் பாய்வே, சீயநோக்கே பருந்து வீழ்வென், றுவகை நான்கே கிடக்கைப் பயனே"; "பொழிப்பே யகல நுட்ப மெச்சமெனப், பழிப்பில் சூத்திரப் பயனான் கென்ப"; "பாடங் கண்ணழி வுதாரண மென்றிவை, நாடிற் றிரிபில வாகுதல்பொழிப்பே"; "தன்னூன் மருங்கினும் பிறநூன் மருங்கினுந், துன்னிய கடாவின் புறந்தோன்று விகற்பம், பன்னிய வகல மென்மனார் புலவர்"; "ஏதுவி னாங்கவை துடைத்த னுட்பம்"; "துடைத்துக்கொள் பொருளை யெச்ச மென்ப". இவற்றானும் பிறவற்றானும் அறிக. இனி, நூல்செய்தற்கு உரியானையும், நூல்செய்யும்ஆற்றையும் சொல்லுதும். "அப்புல மரிறப வறிந்து முதனூல், பக்கம் போற்றும் பயந்தெரிந் துலகத், திட்ப முடைய தெளிவர வுடையோன், அப்புலம் படைத்தற் கமையு மென்ப"; "சூத்திர முரையென் றாயிரு திறனும்,

யாற்படப் போற்றல் படைத்த லென்ப, நூற்பய னுணர்ந்த நுண்ணி யோரே". இவற்றான் அறிக.

போக்கு அறுதல்-நூற்குக்கூறுங் குற்றங்களற்று நன்மையுளவாதல். அவை "[illegible]ணைக் குற்றமு மின்றி நேரிதி னெண்வகைப் புணர்ப்பின வென்மனார் புலவர்". இதனான் அறிக.

'எழுத்துஞ் சொல்லும் பொருளும்' என வைத்துப் பின்னும் 'மயங்கா மரபி னெழுத்துமுறை காட்டி' என்றது பிறநூல்போலச் சொல்லுள் எழுத்தினை மயக்கிக்கூறாது, வேறு வேறாக்கூறினனென்ற தென்பது.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

# தொல்காப்பியம்.

## இளம்பூரணம்.

### எழுத்ததிகாரம்

இவ்வதிகாரம் என் நுதலி எடுத்துக்கொள்ளப்பட்டதோ வெனின், அதிகாரம் நுதலியதூஉம் அதிகாரத்தினது பெயர் உரைப்பவே அடங்கும். அதிகாரம் என்ன பெயர்த்தோ வெனின், எழுத்ததிகாரம் என்னும் பெயர்த்து. எழுத்துணர்த்தினமைக் காரணத்திற்பெற்ற பெயர் என உணர்க.

எழுத்து எனைத்துவகையான் உணர்த்தினாரோ வெனின், எட்டு வகையானும் எட்டிறந்த பலவகையானும் உணர்த்தினாரென்பது. அவற்றுள், எட்டுவகையாவன எழுத்து இனைத்தென்றலும், இன்ன பெயர வென்றலும், இன்ன முறைமைய வென்றலும், இன்ன அளவின வென்றலும், இன்ன பிறப்பின வென்றலும், இன்ன புணர்ச்சிய வென்றலும், இன்ன வடிவின வென்றலும், இன்ன தன்மைய வென்றலும். எனவே, அவற்றுள் தன்மையும் வடிவும் ஆசிரியர் தாம் உணருவரெனினும், நமக்கு உணர்த்தல் அருமையின் ஒழித்து ஆறுமே இதனுள் உணர்த்தினார் என உணர்க. இனி, எட்டிறந்த பலவகையாவன உண்மைத்தன்மையும், குறைவும், கூட்டமும், பிரிவும், மயக்கமும், மொழியாக்கமும், நிலையும், இனமும், ஒன்று பலவாதலும், திரிந்ததன் திரிபது வென்றலும், பிறிதென்றலும், அதுவும் பிறிதும் என்றலும், நிலையிற்றென்றலும், நிலையா தென்றலும், நிலையிற்ற நிலையா தென்றலும், இன்னோரன்னவும் என இவை. இவையெல்லாம் ஆமாறு மேல் வந்தவழிக் கண்டுகொள்க.

இவ்வதிகார இலக்கணம் கருவியும் செய்கையும் என இருவகைத்து. அவற்றுள், கருவி புறப்புறக்கருவியும், புறக்கருவியும், அகப்புறக்கருவியும், அகக்கருவியும் என நான்குவகைப்படும். செய்கை புறப்புறச்செய்கையும், புறச்செய்கையும், அகப்புறச்செய்கையும், அகச்செய்கையும் என நான்குவகைப்படும். நூன்மரபும் பிறப்பியலும் புறப்புறக்கருவி; மொழிமரபு புறக்கருவி; புணரியல் அகப்புறக் கருவி. "ஏகார வோகாரம் பெயர்க்கீறாகா, முன்னிலை மொழிய வென்மனார்புலவர்" [உயிர் மயங்கியல்-எ௰] என்றாற்போல்வன அகக்கருவி. "எல்லா மொழிக்கு முயிர் வரும் வழியே, உடம்படு மெய்யி னுருபுகொளல் வரையார்", [புணரியல்-ந அ] என்றாற்போல்வன புறப்புறச்செய்கை. "லனவென வரூஉம் புள்ளி முன்னர்த் தந வெனவரிற் றனவா கும்மே" [தொகைமரபு-எ] என்றாற்போல்வன புறச்செய்கை. "உகரமொடு புணரும் புள்ளி யிறுதி, யகர முமுயிரும் வருவழி யியற்கை" [தொகைமரபு-உக] என்றாற்போல்வன அகப்புறச்செய்கை. தொகைமரபு முதலிய ஓத்தினுள், இன்ன ஈறு இன்னவாறு முடியுமெனச் செய்கை கூறுவன வெல்லாம் அகச்செய்கை.

### முதலாவது - நூன்மரபு.

இவ்வோத்து என் நுதலிற்றோ வெனின், அதுவும் அதன் பெயர் உரைப்பவே அடங்கும். இவ்வதிகாரத்தாற் சொல்லப்படும் எழுத்திலக்கணத்தினை

ஓராற்றால் தொகுத்து உணர்த்துதலின், நூன்மரபு என்னும் பெயர்த்து. இதனுட் கூறுகின்ற இலக்கணம் மொழியிடை [நின்ற] எழுத்திற்கன்றி, தனிநின்ற எழுத்திற்கென உணர்க.

க. எழுத்தெனப் படுப
அகரமுத னகர விறுவாய்
முப்பஃ தென்ப
சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே.

இத்தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், எழுத்துக்களது பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—எழுத்து எனப்படுப-எழுத்தென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன, அகரம் முதல் னகர இறுவாய் முப்பஃது என்ப-அகரமாகிய முதலை யுடையனவும் னகரமாகிய இறுவாயினையுடையனவுமாகிய முப்பதென்று சொல்லுப (ஆசிரியர்); சார்ந்து வரல் மரபின் மூன்றும் அலங்கடை-சார்ந்து வருதலாகிய இலக்கணத்தினையுடைய மூன்றும் அல்லாவிடத்து

மூன்றும் ஆனவிடத்து முப்பத்து மூன்று என்று சொல்லுப என்றவாறு.

உதாரணம் : அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன் என வரும்.

எனப்படுப என்ற சிறப்பான், அளபெடையும் உயிர்மெய்யும் வரிவடிவும் சிறப்பில்லா எழுத்தாகக் கொள்ளப்பட்டன. அ ஆ என்பன பெயர். முறை அம்முறை. தொகை முப்பது. அவற்றுள், அகரம் தானும் இயங்கித் தனிமெய்களை இயக்குதற் சிறப்பான், முன்வைக்கப்பட்டது. னகாரம் வீடுபேற்றிற்குரிய ஆண்பாலை உணர்த்துதற் சிறப்பான் பின்வைக்கப்பட்டது. தொகை [யென்பது] தொகையுட்டொகையும், தொகையுள்வகையும், தொகையுள்விரியும், வகையுட்டொகையும், வகையுள்வகையும், வகையுள்விரியும், விரியுட்டொகையும், விரியுள்வகையும், விரியுள்விரியும் என ஒன்பதுவகைப்படும். எழுத்தென்பது தொகையுட்டொகை. முப்பதென்பது அதன் வகை. முப்பத்துமூன்றென்பது அதன் விரி. முப்பதென்பது வகையுட்டொகை. முப்பத்துமூன்றென்பது அதன் வகை. அளபெடை தலைப்பெய்து நாற்பதென்பது அதன் விரி. முப்பத்துமூன்றென்பது விரியுட்டொகை. நாற்பதென்பது அதன் வகை. உயிர்மெய் தலைப்பெய்து இருநூற்றைம்பத்தாறென்பது அதன் விரி. செய்யுளின்பம்நோக்கி [illegible] நீக்கிப் பகரம் இடப்பட்டது. அகரமுதல் னகரவிறுவாய் என்ன. இருபெயரொட்டாகுபெயரான் முப்பதன்மேல் நின்றன. (க)

உ. அவைதாம்
குற்றியலிகரங் குற்றியலுகரம் ஆய்த மென்ற
முப்பாற் புள்ளியு மெழுத்தோ ரன்ன.

இது, மேல்சார்ந்துவரும் என்னப்பட்ட மூன்றற்கும் பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அவைதாம்-மேற் சார்ந்துவரும் எனப்பட்டவைதாம், குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பால் புள்ளியும்-குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் என்றுசொல்லப்பட்ட மூன்று கூற்றதாகிய புள்ளியும் என இவை.

எழுத்து ஓர் அன்ன-(அவை) மேற்சொல்லப்பட்ட முப்பது எழுத்தோடு ஒரு தன்மைய.

அப்பெயர் பெயர். அம்முறை முறை. 'எழுத்தோரன்ன' என வேண்டாகூறிய வதனான், முன் 'எனப்படுப' என்ற சிறப்பு அம்மூன்றற்கும் கொள்ளக்கிடந்தமையின், அது விலக்குதல் பெறாது மென்பது. குற்றியலிகரமும் குற்றியலுகரமும் என்னும் எண்ணும்மை விகாரத்தால் தொக்கன. சந்தனக்கோல் குறுகினவிடத்துப் பிரப்பங்கோலாகாது. அதுபோல, இகர உகரங்கள் குறுகினவிடத்தும், அவை உயிர் ஆகற்பாலன. அவற்றைப் புணர்ச்சிவேற்றுமையும் பொருள்வேற்றுமையும் நோக்கி வேறெழுத்தென்று வேண்டினார் ஆசிரியர். (௨)

அவற்றுள்
அ இ உ
எ ஒ வென்னு மப்பா லைந்தும்
ஓரள பிசைக்குங் குற்றெழுத் தென்ப.

இது, மேற்கூறப்பட்டனவற்றிற்கு அளபும் குறியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :— அவற்றுள்-மேற்கூறப்பட்ட எழுத்தினுள். அ இ உ எ ஒ என்னும் அப்பால் ஐந்தும் அ இ உ எ ஒ என்று சொல்லப்படுகின்ற அக்கூற்று ஐந்தும், ஓர் அளபு இசைக்கும் (ஒரோவொன்று)ஓர் அளபாக இசைக்கும்.குற்றெழுத்து என்ப-(அவைதாம்) குற்றெழுத்தென்னும் குறிய என்றுசொல்லுவர் (புலவர்)

இவர் காரணம்பற்றியன்றிக் குறியிடார். ஆகலின். இது தன்குறுமையான் இக்குறி பெற்றது. இக்குறியை ஆண்டவாறு மேல் வந்தவழிக் கண்டுகொள்க. (௩)

௪. ஆ ஈ ஊ ஏ ஐ
ஓ ஔ வென்னு மப்பா லேழும்
ஈரள பிசைக்கு நெட்டெழுத் தென்ப.

இதுவும் அது.

இ-ள் :—ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும் அப்பால் ஏழும்-ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்றுசொல்லப்படுகின்ற அக்கூற்று ஏழும், ஈர் அளபு இசைக்கும்-(ஒரோவொன்று) இரண்டு மாத்திரையாக ஒலிக்கும். நெட்டெழுத்து என்ப-(அவைதாம்) நெட்டெழுத்து என்னும்குறிய என்றுசொல்லுவர் (புலவர்)

ஐகார ஔகாரங்களுக்கு இனம் இல்லையெனினும், மாத்திரை யொப்புமையான் அவை நெட்டெழுத்து எனப்பட்டன.

௫. மூவள பிசைத்த லோரெழுத் தின்றே.

இது, உயிரளபெடையெழுத்திற்கு மாத்திரை கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—மூ அளபு இசைத்தல் ஓர் எழுத்து இன்று-மூன்று மாத்திரையாக ஒலித்தல் இயல்பாகிய ஓர் எழுத்திற்கு இல்லை. (விகாரமாகிய இரண்டு கூடியதற்கு உண்டு.) (௫)

நீட்டம் வேண்டி னவ்வள புடைய
கூட்டி யெழுஉத லென்மனார் புலவர்

இது, உயிரளபெடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—நீட்டம் வேண்டின்-நீண்டமாத்திரையையுடைய அளபெடை எழுத்துப்பெற வேண்டின், அ அளபு உடைய கூட்டி எழூஉதல்-மேற்கூறிய இரண்டளபுடைய நெடிலையும் ஓர் அளபுடைய குறிலையும்(பிளவுபடாமற்)கூட்டி யெழூஉக, என்மனார் புலவர்-என்று சொல்லுவர் புலவர். (௬)

ஏ. கண்ணிமை நொடியென வவ்வே மாத்திரை
நுண்ணிதி னுணர்ந்தோர் கண்ட வாறே.

இஃது, அம்மாத்திரையிலக்கணம் கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—கண்ணிமை என நொடி என அவ் மாத்திரை-கண்ணிமையும் நொடியு மாகிய அவை மாத்திரைக்கு அளபு, நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட ஆறு-(இது) நுண்ணிதாக நூலிலக்கணத்தினை உணர்ந்த ஆசிரியர் கண்ட நெறி.

இமையென்றது இமைத்தற்றொழிலை. நொடியென்றது நொடியிற்பிறந்த ஓசையை. தன் குறிப்பு இன்றி நிகழ்தலின், இமை முன்கூறப்பட்டது. நிறுத்தளத்தல், பெய்தளத்தல், நீட்டியளத்தல், தெறித்தளத்தல், தேங்கமுகந்தளத்தல், சார்த்தியளத்தல், எண்ணியளத்தல் என எழுவகைய என்னும் அளவினுள், இது சார்த்தியளத்தல். 'நுண்ணிதினுணர்ந்தோர் கண்டவாறு' என்றதனான், நாழுழக்குக் கொண்டது நாழியென்றாற்போல, அவ்வளவைக்கு அளவை பெருமை அறிக. (ஏ)

அ. ஔகார விறுவாய்ப்
பன்னீ ரெழுத்து முயிரென மொழிப.

இது, மேற்கூறிய குறிலையும் நெடிலையும் தொகுத்து வேறு ஓர் குறியிடுதல் நுதலிற்று.

இ-ள் :—ஔகார இறுவாய் பன்னீர் எழுத்தும்-ஔகாரமாகிய இறுதியையுடைய பன்னிரண்டு எழுத்தினையும், உயிர் என மொழிப-உயிரென்னும் குறியினையுடைய என்று சொல்லுவர். (அ)

னகார விறுவாய்ப்
பதினெண் ணெழுத்து மெய்யென மொழிப.

இது, மேற்கூறிய உயிரல்லா எழுத்திற்கு ஓர் குறியிடுதல் நுதலிற்று.

இ-ள் :—னகார இறுவாய் பதினெண் எழுத்தும்-னகரமாகிய இறுதியையுடைய பதினெட்டெழுத்தினையும், மெய் என மொழிப-மெய்யென்னும் குறியினையுடைய என்று சொல்லுவர். (௯)

ம. மெய்யோ டியையினு முயிரிய றிரியா.

இஃது, உயிர்மெய்க்கு அளபு கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—மெய்யோடு இயையினும்-(உயிர்மெய்யாவன) மெய்களோடு உயிர் இயையப்பிறந்த நிலைமையவாயினும், உயிரியல் திரியா-(அவ்வுயிர்மெய்கள் அவ்வியைபின்கண்ணே வேறு ஓர் எழுத்தாய் நின்றமையின், மெய்யோடு இயைபின்றி நின்ற) உயிர்களது இயல்பில் திரியா.

உயிரும் மெய்யும் கூடுகின்ற உயிர்மெய்க்கூட்டத்தினை, 'மெய்யோடியையினும்' என உயிர்மேல்வைத்துக்கூறியது, அவ்வுயிரின் மாத்திரையே இதற்குமாத்திரையாகக் கூறுகின்றமை நோக்கிப்போலும். இயலென்றது பெரும்பான்மை

மாத்திரையினை. சிறுபான்மை குறியும் எண்ணும் கொள்க.
க எனவும், கா எனவும் அவ்வாறு நின்றமை அறிக். (ம)

கக. மெய்யி னளபே யரையென மொழிப.

இது, தனிமெய்க்கு அளபு கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—மெய்யின் அளபு-மெய்யது மாத்திரையினை, அரை என மொழிப-(ஒரோ வொன்று) அரை மாத்திரை யுடைய வென்று சொல்லுவர்.

காக்கை, கோங்கு எனக் கண்டுகொள்க. ஈண்டு [வேற்றுமைநயமின்றி] ஒற்றுமைநயம் கருதப்பட்டது. (கக)

கஉ. அவ்வியனிலையு மேனை மூன்றே.

இது, சார்பிற்றோற்றத்து எழுத்து மூன்றற்கும் அளபு கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—அ இயல் நிலையும் - மேற்கூறிய அரை மாத்திரையாகிய அவ்வியல் பின்கண்ணே நிற்கும், ஏனைமூன்று-ஒழிந்த சார்பிற் றோற்றத்து மூன்றும்.

கேண்மியா, நாகு, எஃகு எனக் கண்டுகொள்க. [ஏகாரம் ஈற்றசை] (கஉ)

கங. அரையளபு குறுகன் மகர முடைத்தே
இசையிட னருகுந் தெரியுங் காலை.

இது, மெய்களுள் ஒன்றற்கு மாத்திரைச் சுருக்கம் கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—அரை அளபு குறுகல் மகரம் உடைத்து-அரையளபாகிய வெல்லையிற் குறுகிக் கான்மாத்திரை யாதலை மகரமெய் உடைத்து. (அஃது யாண்டோவெனின்) இசையிடன் அருகும்-வேறு ஓர் எழுத்தினது ஒலியின்கண் அது சிறுபான்மையாகி வரும், தெரியுங்காலை-ஆராயுங்காலத்து.

உ - ம். போன்ம், வரும் வண்ணக்கன் எனவரும். கான்மாத்திரையென்பது உரையிற்கோடல். [ஏகாரம் ஈற்றசை.] (கங)

கச. உட்பெறு புள்ளி யுருவா கும்மே.

இது, பகரத்தின் மகரத்திடை வரிவடிவு வேற்றுமைசெய்தல் நுதலிற்று.

இ-ள் :—உள்பெறு புள்ளி உருவு ஆகும்-புறத்துப்பெறும் புள்ளியோடு உள்ளாற்பெறும் புள்ளி மகரத்திற்கு வடிவாம். (அஃதின்மை பகரத்திற்குவடிவாம்.)

உ - ம். ம, ப எனக் கண்டுகொள்க.

[உள்ளாற் பெறும்புள்ளி குறுகிய மகரத்திற்கு வடிவாம் என்பதே இச்சூத்திரத்திற்கு நேர் உரை. ஏகாரம் ஈற்றசை.] (கச)

கரு. மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்.

இஃது, உயிர்மெய்யோடு தனிமெய்யிடை வடிவுவேற்றுமை செய்தல் நுதலிற்று.

இள் :—மெய்யின் இயற்கை-தனிமெய்யினது இயல்பு, புள்ளியொடு நிலையல்-புள்ளியொடு நிற்றல். (உயிர்மெய்யினதியல்பு புள்ளியின்றி நிற்றல்.)

க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன் எனக் கண்டுகொள்க. (கரு)

கசு. எகர ஒகரத் தியற்கையு மற்றே.

இஃது, எகர ஒகரங்கட்கு ஏகார ஓகாரங்களோடு வடிவுவேற்றுமை செய்தல் நுதலிற்று.

இ-ள்:—எகர ஒகரத்து இயற்கையும் அற்று-எகர ஒகரங்களது இயல்பும் அவ்வாறு புள்ளிபெறும் இயல்பிற்று. (எகார ஒகாரங்களது இயல்பு அப்புள்ளி பெறு இயல்பிற்று.) [ஏகாரம் ஈற்றசை.] (கசு)

உ-ம். எ், ஒ்.

கஎ. புள்ளி யில்லா வெல்லா மெய்யும்
உருவுரு வாகி யகரமோ டுயிர்த்தலும்
ஏனை யுயிரோ டுருவுதிரிந் துயிர்த்தலும்
ஆயீ ரியல வுயிர்த்த லாறே.

இஃது, உயிரும் மெய்யும் கூடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—எல்லா மெய்யும் புள்ளி இல்லாக - எல்லா மெய்களும் புள்ளி இல்லையாம்படியாக, உருவு உருவு ஆகி - தத்தம் முன்னைவடிவே இன்னும் வடிவாக, அகரமோடு உயிர்த்தலும் - அகரத்தோடுகூடி ஒலித்தலும், ஏனை உயிரொடு உருவு திரிந்து உயிர்த்தலும்-ஒழிந்த உயிர்களோடு வடிவு வேறுபட்டு ஒலித்தலுமாகிய, அ ஈர் இயல-அவ்விரண்டு இயல்பினையுடைய, உயிர்த்தல் ஆறு-அவை ஒலிக்கு முறைமை.

"தன்னின முடித்தல்" என்பதனான், அளபெடை உயிரோடும் சார்பிற்றோற்றத்து உயிரோடும் கூடும் உயிர்மெய்யும் கொள்க.

உ-ம். உருவு உருவாகி உயிர்த்தல் க ங எனக் கண்டுகொள்க. உருவு திரிந்து உயிர்த்தல் கா ஙா எனக் கண்டுகொள்க.

ஈண்டு உயிரும் மெய்யும் கூடுகின்ற உயிர்மெய்க்கூட்டத்தினை, எல்லா மெய்யு மென்று மெய்மேல் வைத்துக் கூறியது, அது முன்கூறிக் கூறப்படுதல் நோக்கிப் போலும். உயிர்மெய் யென்பதனை, ஒற்றுமைகொள்வுழி உம்மைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை யெனவும், வேற்றுமை கொள்வுழி உம்மைத்தொகையெனவும் கொள்க. 'இல்லாக' என்பது 'இல்லா' என நின்றது. உருவு திரிந்து உயிர்த்தல் மேலும் கீழும் விலங்கு பெறுவன விலங்கு பெற்று உயிர்த்தலும், கோடுபெறுவன கோடுபெற்று உயிர்த்தலும், புள்ளிபெறுவன புள்ளிபெற்று உயிர்த்தலும், புள்ளியும் கோடும் உடன்பெறுவன புள்ளியும் கோடும் உடன்பெற்று உயிர்த்தலும் எனக்கொள்க. (கஎ)

கஅ. மெய்யின் வழிய துயிர்தோன்று நிலையே.

இது, உயிர்மெய்யுள் உயிரும் மெய்யும் நிற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இள் :—உயிர்-உயிர், மெய்யின் வழியது-மெய்களின் பின்னவாம், தோன்றும் நிலை-உயிர்கள்தோன்றும் நிலைமைக்கண்.

'தோன்று நிலை' என்றதனான், உயிர்மெய்களைப் பிரிக்குமிடத்தும் கூட்டுமிடத்தும், அவ்வாறே முன்னும் பின்னும் ஆதலைக் கொள்க. மெய்யும் உயிரும் முன்னும் பின்னும் பெறநிற்குமென்றமையால், அக்கூட்டம் பாலும் நீரும்போல உடன் கலந்ததன்றி, விரல் நுனிகள் தலைப்பெய்தாற்போல வேறுநின்று கலந்தனவல்ல என்பது பெறுதும். ஈண்டு வேற்றுமைநயம் கருதப்பட்டது. [ஏ-ஈற்றசை.] (கஅ)

கசு. வல்லெழுத் தென்ப க ச ட த ப ற.

இது, தனிமெய்களுள் சிலவற்றிற்கு வேறு ஓர் குறியிடுதல் நுதலிற்று.

இ-ள் :—வல்லெழுத்து என்ப-வல்லெழுத்து என்னும் குறிய என்றுசொல்லுவர், க ச ட த ப ற-க ச ட த ப ற என்னும் தனிமெய்களை.

வல்லென்று இசைத்தலானும், வல் என்ற தலைவளியாற் பிறத்தலானும் வல்லெழுத்து எனப்பட்டது. மொழிக்கு முதலாமெழுத்து நான்கு உளவாகலானும், அவற்றால் வழக்குப்பயிற்சி பெரிதாகலானும் [வல்லினம்] முன்கூறப்பட்டது. [க ச ட த ப ற எனனும் தனிமெய்கள் க் ச் ட் த் ப் ற்.] (௧௯)

௨௰. மெல்லெழுத் தென்ப ங ஞ ண ந ம ன.

இதுவும் அது.

இ-ள் :—மெல்லெழுத்து என்ப - மெல்லெழுத்து என்னும் குறிய என்று சொல்லுவர், ங ஞ ண ந ம ன-ங ஞ ண ந ம ன என்னும் தனிமெய்களை.

மெல்லென்று இசைத்தலானும், மெல் என்ற மூக்கின்வளியாற் பிறத்தலானும், மெல்லெழுத்து எனப்பட்டன. மொழிக்கு முதலாமெழுத்து மூன்று உளவாகலானும் அவற்றின் வழக்குப்பயிற்சியானும் [மெல்லினம்], முதலாமெழுத்துச் சிறுபான்மை வழக்கினவாய் இரண்டாகிய இடையினத்தின்முன் வைக்கப்பட்டது. வன்மை மென்மை கூறலின், எழுத்து அருவன்றி உருவாதல் பெறப்பட்டது. உயிருக்கும் குறுமை நெடுமை கூறலின்,உருவென்பது பெறுதும். (௨௰)

[ங ஞ ண ந ம ன என்னும் தனிமெய்கள் ங் ஞ் ண் ந் ம் ன்.]

௨௧. இடையெழுத் தென்ப ய ர ல வ ழ ள.

இதுவும் அது.

இ-ள் :—இடையெழுத்து என்ப - இடையெழுத்து என்னும் குறிய என்று சொல்லுவர், ய ர ல வ ழ ள-ய ர ல வ ழ ள என்னும் தனிமெய்களை.

இடைநிகரவாகி ஒலித்தலானும், இடைநிகர்த்தாய மிடற்றுவளியாற் பிறத்தலானும் இடையெழுத்து எனப்பட்டது. [ய ர ல வ ழ ள என்னும் தனிமெய்கள் ய் ர் ல் வ் ழ் ள்.] (௨௧)

௨௨. அம்மூ வாறும் வழங்கியன் மருங்கின்
மெய்ம்மயக் குடனிலை தெரியுங் காலை.

இது, தனிமெய் மயக்கத்திற்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அ மூ ஆறும்-மேற்சொல்லப்பட்ட (மூவாறு) பதினெட்டு மெய்யும், வழங்கு இயல் மருங்கின் - தம்மை மொழிப்படுத்தி வழங்கும் இயல்பு உளதாமிடத்து, மெய்மயக்கு-மெய் மயக்கம் என்றும், உடன்நிலை-உடனிலை மயக்கம் என்றும் இருவகைய, தெரியும் காலை-(அவை மயங்கு முறைமை) ஆராயும் காலத்து.

உயிர், மெய், உயிர்மெய் என்னும் மூன்றனையும் உறழ்ச்சிவகையான் உறழ ஒன்பது உளவாமன்றே, அவற்றுள் தனிமெய்யோடு தனிமெய் மயக்கம் ஒன்றே கூறிய தென்னெனின், மற்றவற்றிற்கு வரையறை யின்மையின், வரையறையுடைய தனிமெய்மயக்கமே கூறியொழிந்தார் என உணர்க. மெய் என்றதனால், தனிமெய்யோடு உயிர்மெய் மயக்கமன்றி, தனிமெய்யோடு தனிமெய் மயக்கமாதல் கொள்க. (௨௨)

உங. டறலள வென்னும் புள்ளி முன்னர்க்
கசப வென்னு மூவெழுத் துரிய.

இது, மெய்மயக்கம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ட ற ல ள என்னும் புள்ளி முன்னர்-ட ற ல ள என்று சொல்லப் படும் புள்ளிகளின் முன்னர், க ச ப என்னும் மூ எழுத்து உரிய-க ச ப என்று சொல்லப்படும் மூன்றெழுத்தும் மயங்குதற்கு உரிய.

உ-ம். கட்க, கற்க, செல்க, கொள்க எனவும், கட்சிறார், கற்சிறார், செல்சிறார், கொள்சிறார் எனவும், கட்ப, கற்ப, செல்ப, கொள்ப எனவும் வரும்.

மேல் 'தெரியுங்காலே' என்றதனான், இம்மெய்மயக்கம் கூறுகின்ற சூத்திர மெல்லாம் பலபடியால் மயக்கம் கொள்ளச் சொல்நோக்கு உடையவெனினும்,வழ க்கினோடு பொருந்த ஒன்றனோடு ஒன்றன்றி மயங்காதென்பது கொள்க. மெய் மயக்கம் ஒருமொழிக்கும் புணர்மொழிக்கும் பொதுவாகலின், மேற் கூறும் புணர் மொழிச் செய்கையெல்லாம் தலையாய அறிவினோரை நோக்க ஒருவாற்றாற் கூறி யவா றாயிற்று. (உங)

உச. அவற்றுள்
லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும்.

இதுவும் அது.

இ-ள் :—அவற்றுள்-மேற்கூறிய நான்கனுள்ளும், லளஃகான் முன்னர்-லகார ளகாரங்களின் முன்னர், யவவும் தோன்றும்-கசபக்களேயன்றி யகர வகரங்களும் தோன்றிமயங்கும்.

உ-ம். கொல்யானை, வெள்யானை, கோல்வளை, வெள்வளை எனவரும். (உச)

உரு. ஙஞணநமனவெனும் புள்ளி முன்னர்த்
தத்த மிசைக ளொத்தன நிலையே.

இதுவும் அது.

இ-ள் :—ங ஞ ண ந ம ன என்னும் புள்ளி முன்னர்-ங ஞ ண ந ம ன என்று சொல்லப்படும் புள்ளிகளின் முன்னர், தம்தம் மிசைகள் ஒத்தன-(நெடுங்கணக்கி னுள்) தத்தமக்கு மேல்நிற்கும் எழுத்தாகிய க ச ட த ப ற க்கள் பொருந்தின, நிலை-மயங்கிநிற்றற்கண். [ஏகாரம் ஈற்றசை.]

உ-ம். தெங்கு, மஞ்சு, வண்டு, பந்து, கம்பு, கன்று எனவரும். (உரு)

உசு. அவற்றுள்
ணனஃகான் முன்னர்க்
* கசஞப மயவவ் வேழு முரிய.

இதுவும் அது.

இ-ள் :—அவற்றுள்-மேற்கூறப்பட்ட மெல்லெழுத்து ஆறனுள், ணனஃகான் முன்னர் - ணகார னகாரங்களின் முன்னர், க ச ஞ ப ம ய வ ஏழும் உரிய-(டறக்களே யன்றி,) க ச ஞ ப ம ய வ் என்றுசொல்லப்படும் ஏழும் மயங்குதற்கு உரிய.

உ-ம். வெண்கலம், புன்கண், வெண்சாந்து, புன்செய், வெண்ஞாண், பொன்ஞாண், வெண்பலி, பொன்பெரிது, வெண்மாலை, பொன்மாலை, மண்யாது, பொன்யாது, மண்வலிது, பொன்வலிது எனவரும். (உசு)

**உஎ. ஞநமவ வென்னும் புள்ளி முன்னர்**
**யஃகா னிற்றன் மெய்பெற் றன்றே.**

இதுவும் அது

இ-ள் :—ஞ ந ம வ என்னும் புள்ளி முன்னர்-ஞ ந ம வ என்றுசொல்லப்படுகின்ற புள்ளிகளின் முன்னர், யஃகான் நிற்றல் மெய்பெற்றன்று-யகரம் மயங்கி நிற்றல் பொருண்மைபெற்றது. [ஏகாரம் ஈற்றசை.]

உ-ம். உரிஞ்யாது, பொருந்யாது, திரும்யாது, தெவ்யாது எனவரும். (உஎ)

**உஅ. மஃகான் புள்ளிமுன் வவ்வுந் தோன்றும்.**

இதுவும் அது.

இ-ள் :—மஃகான் புள்ளிமுன்-மகரமாகிய புள்ளி முன்னர், வ உம் தோன்றும்-(பகர யகரங்களேயன்றி) வகரமும் தோன்றிமயங்கும். (உஅ)

உ-ம். நிலம் வலிது எனவரும்.

**உகூ. யரழ வென்னும் புள்ளி முன்னர்**
**முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும்.**

இதுவும் அது.

இ-ள் :—ய ர ழ என்னும் புள்ளி முன்னர்-ய ர ழ என்றுசொல்லப்படுகின்ற புள்ளிகளின் முன்னர், முதல் ஆகு எழுத்து ஙகர மொடு தோன்றும் - மொழிக்கு முதல் ஆம் என்னப்பட்ட ஒன்பதுமெய்யும் (முதலாகா) ஙகரத்தோடு தோன்றி மயங்கும்.

உ-ம். வேய் கடிது, வேர் கடிது, வீழ் கடிது, சிறிது, தீது, பெரிது; ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது எனவரும். வேய்ஙனம், வேர்ஙனம், வீழ்ஙனம் எனவும் ஒட்டுக. வேய் யாது என்புழி, உடனிலையாதலான் யகரம் ஒழித்து ஒட்டுக. (உகூ)

['மொழிக்கு முதல் ஆம் என்னப்பட்ட ஒன்பது மெய்' என்பது மொழிக்கு முதலாய் வரும் ஒன்பது உயிர்மெய்யெழுத்துக்களில் உயிரொழிந்த மெய்களைக் குறித்துநின்றது.]

**௩0. மெய்ந்நிலைச் சுட்டி னெல்லா வெழுத்துந்**
**தம்முற் றாம்வரூஉம் ரழவலங் கடையே.**

இது, நிறுத்த முறையானே உடனிலைமயக்கம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—மெய்நிலை சுட்டின்-பொருள்நிலைமைக் கருத்தின்கண், எல்லா எழுத்தும் தம்முன் தாம் வரும்-எல்லா மெய்யெழுத்தும் தம்முன்னே தாம் வந்துமயங்கும், ர ழ அலங்கடை-ரகார ழகாரங்கள் அல்லாதஇடத்து. [ஏகாரம் ஈற்றசை.]

உ-ம். காக்கை, எங்ஙனம், பச்சை, மஞ்ஞை, பட்டை, மண்ணை, தத்தை, வெந்நோய், அப்பை, அம்மி, வெய்யர், எல்லி, எவ்வீ, கொள்ளி, கொற்றி, கன்னி

எனவரும். 'மெய்ந்நிலைச்சுட்டின்' என்றதனால், 'தம்முற்றும்வரும்' என்றது மெய்ம்முன்னர் மெய்யென்னும் மாத்திரையன்றி உடனிலைமெய் மேலதாம் என்பதுகொள்க. 'எல்லாம்' என்றது, மேல் ய ர ழ என்ற அதிகாரம் மாற்றிவந்து நின்றது. (ங0)

ங௧. அ இ உ அம் மூன்றுஞ் சுட்டு.

இ-ள்:—அ இ உ அம்மூன்றும் சுட்டு-(குற்றெழுத்து என்னப்பட்ட) அ இ உ என்னும் அம்மூன்றும் சுட்டு என்னும் குறியவாம்.

உ-ம். அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம் எனவரும். (ங௧)

ஙஉ. ஆ ஏ ஓ அம் மூன்றும் வினா.

இ-ள்:—ஆ ஏ ஓ அம்மூன்றும் வினா-(மேல் நெட்டெழுத்து என்னப்பட்ட) ஆ ஏ ஓ என்னும் அம்மூன்றும் வினா என்னும் குறியவாம்.

உ-ம். உண்கா, உண்கே, உண்கோ சாத்தா எனவரும்.

"தன்னின முடித்தல்" என்பதனால், எகாரமும் யகரஆகாரமும் வினாப் பெறு மெனக்கொள்க. இக்குறிகளையும் முன்குறிலென்றும் நெடிலென்றும் கூறியவழியே கூறுகவெனின், இவை சொல்நிலைமையிற்பெறும் குறியாகலின், ஆண்டு வையாது மொழிமரபினைச் சாரவைத்தார் என்க. இக்குறி மொழிநிலைமைக்கேல் எழுத்தின் மேல் வைத்துக் கூறியது என்னையெனின், இவ்வதிகாரத்துப் பெயர்வினையல்லன வற்றிற்குக் கருவிசெய்யாமையின் என்க. (ஙஉ)

ஙங. அளபிறந் துயிர்த்தலு மொற்றிசை நீடலும்
உளவென மொழிப விசையொடு சிவணிய
நரம்பின் மறைய வென்மனார் புலவர்.

இஃது, எழுத்துக்கள் முற்கூறிய மாத்திரையின் நீண்டுநிற்கும் இடம் இது வென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—அளபு இறந்து உயிர்த்தலும்-(உயிரெழுத்துக்களெல்லாம்) தமக்குச் சொன்ன அளவினைக் கடந்து ஒலித்தலையும், ஒற்று இசை நீடலும்-ஒற்றெழுத்துக் கள் தம்மொலி முன்கூறிய அளபின் நீடலையும், இசையொடு சிவணிய நரம்பின் மறைய-(இந்நூலுட்கூறும் விகாரியின் கண்ணேயன்றிக்) குரல்முதலிய ஏழிசை யோடு பொருந்திய நரம்பினையுடைய யாழினது இசைநூற்கண்ணும், உள என மொழிப என்மனார் புலவர்-உள எனச்சொல்லுவர் அவ்விசைநூலாசிரியர் என்று சொல்லுவர் புலவர்.

ஒற்றிசை நீடலும் என்றனர், அளபிறந்துயிர்த்த லென்றது அதிகாரத்தால் நின்ற உயிர்மேற்சேறலின். உள வென்றது அந்நீட்டிப்பு ஒருதலையன் றென்பது விளக்கிற்று. இசைநூலாசிரியரும் முதனூலாசிரியர்தாமே யெனினும், 'மொழிப' என வேறொருவர்போலக் கூறியது, அதுவும் வேறு ஒரு நூலாகச் செய்யப்படும் நிலைமைநோக்கிப் போலும். 'மறையும்' என்பதன் உம்மை விகாரத்தால் தொக் கது. அகரம் செய்யுள் விகாரம். (ஙங)

முதலாவது நூன்மரபு முற்றிற்று

## இரண்டாவது மொழிமரபு.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின், மொழிகளுக்கு எழுத்தான் வரும் மரபு உணர்த்தினமையின் மொழிமரபு எனப்பட்டது. இதனுள் கூறுகின்றது தனிநின்ற எழுத்திற் கன்றி மொழியிடை [நின்ற] எழுத்திற்கு எனவுணர்க.

௩௪. குற்றிய லிகர நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை யுரையசைக் கிளவிக்
காவயின் வரூஉ மகர மூர்ந்தே.

இத்தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், சார்பிற்றோற்றத்து எழுத்துக்களிற் குற்றியலிகரத்தில் ஒருமொழிக்குற்றியலிகரத்திற்கு இடமும் பற்றுக்கோடும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—குற்றியலிகரம்-ஒருமொழிக்குற்றியலிகரம்,உரையசைக் கிளவிக்கு-உரையசைச் சொல்லாகிய மியா என் முதற்கு, ஆ வயின் வரூஉம்-(சினையாக) அச்சொற்றன்னிடத்து வருகின்ற, யா என் சினைமிசை-யா என் சினைமிசை, மகரம் ஊர்ந்து நிற்றல்வேண்டும்-மகர ஒற்றினை ஊர்ந்து நிற்றலைவேண்டும் (ஆசிரியன்).

உ-ம். கேண்மியா எனவரும். மியா என்னும்சொல் இடம். மகரம் பற்றுக்கோடு. யா என்னும் சினையும் மகரம்போலக் குறுகுதற்கு ஒரு சார்பு. (க)

௩௫. புணரிய னிலையிடைக் குறுகலு முரித்தே
உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்

இது, குற்றியலிகரம் புணர்மொழியுள்ளும் வருமென்று உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—புணர் இயல் நிலை இடையும்-இருமொழி தம்மிற் புணர்தல் இயன்ற நிலைமைக்கண்ணும், குறுகல் உரித்து-அவ்விகரம் குறுகுதலுடைத்து. உணரக்கூறின்-(ஆண்டை இடத்தினையும் பற்றுக்கோட்டினையும் ஈண்டு) உணரக் கூறப்புகின், முன்னர் தோன்றும்-(அது வேண்டுவதில்லை,) குற்றியலுகரப்புணரியலுள் (அவ்விடனும் பற்றுக்கோடும்) தோன்றும்.

'புணரிய னிலை யிடையும்' என மொழிமாற்றி உரைக்க. முன்னர்த்தோன்றுமாறு : "யகரம் வரும்வழி யிகரங் குறுகும், உகரக் கிளவி துவரத்தோன் றாது" [குற்றியலுகரப் புணரியல்-ரு] என்பதனுள் அறிக. உகரம்சார்ந்த வல்லெழுத்துப் பற்றுக்கோடு.

உ-ம். நாகியாது, வரகியாது, தெள்கியாது, எஃகியாது, கொக்கியாது, குரங்கியாது எனவரும். (உ)

௩௬. நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றுங்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே.

இஃது, ஒருமொழிக் குற்றியலுகரத்திற்கு இடமும் பற்றுக்கோடும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—நெட்டெழுத்து இம்பரும்-நெட்டெழுத்தினது பின்னும், தொடர் மொழி ஈற்றும்-தொடர்மொழியது இறுதியினும், குற்றியலுகரம் வல்லாறு ஊர்ந்து (நிற்றல் வேண்டும்)-குற்றிய லுகரம் வல்லெழுத்து ஆறினையும் ஊர்ந்து (நிற்றலை வேண்டும் ஆசிரியன்).

" தந்துபுணர்ந்துரைத்தல் " [மரபு-௱ம] என்னும் தந்திரவுத்தியான், முன்னின்ற 'நிற்றல் வேண்டும்' என்பது ஈண்டும் புணர்க்கப்பட்டது.

உ-ம். நாகு, வரகு என வரும்.

நெட்டெழுத்திம்பரும் தொடர்மொழியீறும் இடம். வல்லெழுத்துப் பற்றுக்கோடு. இவ்வாறு இடமும் பற்றுக்கோடும் கூறவே, மொழிக்கு ஈறாதலும் கூறியவா றாயிற்று. (௩)

௩எ. இடைப்படிற் குறுகு மிடனு மாருண்டே
கடப்பா டறிந்த புணரிய லான.

இது, குற்றியலுகரம் புணர்மொழியுள்ளும் வருமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—இடைப்படினும் குறுகும் இடன் உண்டு-(அவ்வுகரம்) புணர்மொழி இடைப்படினும் குறுகும் இடமுண்டு. (அதன் இடமும் பற்றுக்கோடும் யாண்டோ பெறுவதெனின்) கடப்பாடு அறிந்த புணரியலான்-அதன் புணர்ச்சிமுறைமை அறியும் குற்றியலுகரப்புணரியலின்கண்ணே.

'இடைப்படினும் குறுகும்' என மொழிமாற்றி உரைக்க. அக்குற்றியலுகரப் புணரியலுள் " வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழித், தொல்லை யியற்கை நிலையலு முரித்தே " [குற்றியலுகரப் புணரியல்-௪] என்பதனுள் வல்லொற்றுத்தொடர்மொழியும் வல்லெழுத்துவருவழியும் இடம். அவ்வல்லொற்றுத்தொடர்மொழியீற்று வல்லெழுத்துப் பற்றுக்கோடு.

உ-ம். செக்குக்கணை, சுக்குக்கோடு எனவரும்.

'இடன்' என்றதனான், இக்குறுக்கம் சிறுபான்மை என்றுணர்க. [ஆர், ஏ என்பன அசைகள். 'புணரியலான்' என்பது வேற்றுமை மயக்கம். அகரம் சாரியை.] (௪)

௩அ. குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.

இஃது, ஒருமொழி ஆய்தம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ஆய்தப் புள்ளி-ஆய்தமாகிய புள்ளி, குறியதன்முன்னர்-குற்றெழுத்தின் முன்னர், உயிரொடு புணர்ந்த வல் ஆறன் மிசைத்து-உயிரொடுபுணர்ந்த வல்லெழுத்து ஆறன் மேலது.

உ-ம். எஃகு, கஃசு எனவரும்.

குறியதன்முன்னரும் வல்லெழுத்துமிசையும் இடம். இஃது உயிரன்மையின், இதற்குப் பற்றுக்கோடு என்பதில்லை. கஃறீது என்புதனை மெய்பிறிதாகிய புணர்ச்சி [புணரியல்-எ] என்ப வாகலின், 'புள்ளி' என்றதனான் ஆய்தத்தை மெய்ப்பாற் படுத்துக்கொள்க. ஈண்டு உயிரென்றது, மேல் 'ஆய்தத்தொடர் மொழி' [குற்றியலுகரப் புணரியல்-க] என்றோதலின் பெரும்பான்மையும் குற்றியலுகரத்தினை. வெஃகாமை முதலிய பிற உயிர் வரவு சிறுபான்மை யெனக்கொள்க. (௫)

௪௨. ஐ ஔ வென்னு மாயீ ரெழுத்திற்
கிகர வுகர மிசைநிறை வாகும்

இது, மேலதற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ஐ ஔ என்னும் ஆயீர் எழுத்திற்கு-(ஒத்த குற்றெழுத்து இல்லா) ஐ ஔ என்றுசொல்லப்படும் அவ்விரண்டெழுத்திற்குமுன், இகரம் உகரம் இசைநிறைவு ஆகும்-(ஐகாரம் ஔகாரங்கட்கு ஒத்த குற்றெழுத்தாகிய) இகர உகரங்கள் (அக்குன்றிசை மொழிக்கண் நின்று) ஓசையை நிறைப்பன வாகும்.

இத்துணையும் நூன்மரபின் ஒழிபு. (௯)

௪௩. நெட்டெழுத் தேழே யோரெழுத் தொருமொழி.

இது, எழுத்தினான் மொழியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—நெட்டெழுத்து ஏழும்-நெட்டெழுத்தாகிய ஏழும், ஓர் எழுத்து ஒரு மொழி-ஓர் எழுத்தானாகும் ஒரு மொழியாம்.

உ-ம். ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ எனவரும்.

இதுவும் உயிர்க்கும் உயிர்மெய்க்கும் பொது. ஔகாரத்தில் உயிர்மெய்யினையே கொள்க. 'ஏழும்' என்பதன் உம்மை விகாரத்தால் தொக்கது. [ஏகாரம் அசை.] (௰)

௪௪. குற்றெழுத் தைந்து மொழிநிறை பிலவே.

இது, குற்றெழுத்துக்கள் ஓரெழுத்தொருமொழி ஆகா வென்பதும், அவற்றுள் ஒருமொழியாவன உளவென்பதும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—குற்றெழுத்து ஐந்தும்-குற்றெழுத்தாகிய ஐந்தும், மொழி நிறைபு இல-ஓரெழுத்தாய்நின்று ஒருமொழியாய் நிறைதல் இல.

அவற்றுட் சில நிறைக்கும்.

ஒகரம் ஒழிந்த நான்கும் சுட்டாயும் வினாவாயும் மொழிநிறைக்குமன்றோ வெனின், அவை இடைச்சொல்லாதலின், அவற்றிற்குக் கருவிசெய்யார் என்க. ஐந்தும் என்பதன் உம்மை தொக்கு எச்சப்படுகின்றது. [ஏகாரம் ஈற்றசை.]

இதுவும் உயிர்க்கும் உயிர்மெய்க்கும் பொது.

உ-ம். து, நொ எனவரும். (௧௧)

௪௫. ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி
இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே.

இது, எழுத்தினான் ஆகும் மொழிகளின் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ஓர் எழுத்து ஒருமொழி-ஓரெழுத்தான் ஆகும் ஒருமொழி, ஈர் எழுத்து ஒருமொழி-இரண்டெழுத்தான் ஆகும் ஒருமொழி, இரண்டு இறந்து இசைக்கும் தொடர்மொழி-இரண்டிறந்து பலவற்றான் இசைக்கும் தொடர்மொழி, உளப்பட மூன்று-உட்பட்ட மொழிகளின் நிலைமை மூன்றாம், தோன்றிய நெறி-அவை தோன்றிய வழக்குநெறிக்கண். [ஏகாரம் ஈற்றசை.]

உ-ம். ஆ, மணி, வரகு, கொற்றன் எனவரும். (௧௨)

சசு. **மெய்யி னியக்க மகரமொடு சிவணும்.**

இது, தனிமெய்களைச் சொல்லும் முறைநிலை இதுவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—மெய்யின் இயக்கம்-தனிமெய்களினது இயக்கம், அகரமொடு சிவணும்-அகரத்தோடு பொருந்தும்.

உ-ம். "ட ற ல ள வென்னும் புள்ளி" [நூன்மரபு-உங] எனவரும்.

இது மொழியிடை [நின்ற] எழுத்துக்கள் அன்மையின் நூன்மரபின் வைக்க வெனில், தன்னை உணர்த்தாது வேறு பொருள் உணர்த்தும் சொல்நிலைபோல 'டறலள' வென்றது உயிர்மெய்யை உணர்த்தாது தனிமெய்யை உணர்த்தலானும், ஒற்றினை உயிர்மெய்போலச் சொல்லுகின்ற வழுவமைதியிலக்கணத்தானும் மொழிமரபின்கண்ண தாயிற்றென உணர்க. (கங)

சஎ. **தம்மியல் கிளப்பி னெல்லா வெழுத்து**
**மெய்ந்நிலை மயக்க மான மில்லை.**

இது, மெய்ம்மயக்கத்திற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—எல்லா எழுத்தும் தம் இயல் கிளப்பின்-எல்லா மெய்யெழுத்தும் மொழியிடையின்றித் தம் வடிவின் இயல்பைச் சொல்லுமிடத்து, மெய்மயக்கநிலை மானம் இல்லை-மெய்ம்மயக்கநிலையின் மயங்கிவருதல் குற்றம் இல்லை.

உ-ம். "வல்லெழுத் தியையின் டகார மாகும்" [புள்ளிமயங்கு-எ]எனவரும்.

இதனை அம் மெய்ம்மயக்கத்து வைக்கவெனின், இது வழுவமைதிநோக்கி மொழிமரபின்கண்ண தாயிற்று. (கச)

சஅ. **யரழ வென்னு மூன்றுமுன் னொற்றக்**
**கசதப ஙஞநம வீரொற் றாகும்.**

இஃது, ஈர் ஒற்று உடனிலை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ய ர ழ என்னும் மூன்று-ய ர ழ என்றுசொல்லப்படுகின்ற மூன்றனுள் ஒன்று, முன் ஒற்ற-(குறிற்கீழும் நெடிற்கீழும்) முன்னே ஒற்றாய் நிற்ப (அவற்றின் பின்னே), கசதப ஙஞநம ஈர் ஒற்றாகும்-கசதபக்களிலொன்றாதல் ஙஞநமக்களிலொன்றாதல் ஒற்றாய்வர அவை ஈரொற்றுடனிலையாம்.

உ-ம். வேய்க்குறை, வேய்ங்குறை, வேர்க்குறை, வேர்ங்குறை, வீழ்க்குறை, வீழ்ங்குறை, சிறை, தலை, புறம் என ஒட்டுக.

இவ்விதி மேல் ஈற்றகத்து உணர்ந்துகொள்ளப்படுமாலெனின், இது 'ஈர்க்கு' பீர்க்கு' என ஒருமொழியுள் வருதலானும், இரண்டுமொழிக்கண் வருதல் விகாரமாதலானும் ஈண்டுக் கூறப்பட்டது. அஃதேல், இதனை நூன்மரபினகத்து மெய்ம்மயக்கத்துக்கண் கூறுக வெனின், ஆண்டு வேற்றுமைநயம்கொண்டதாகலின் மூவொற்று உடனிலையாதல் நோக்கி ஒற்றுமைநயம்பற்றி ஈண்டுக் கூறப்பட்டது. (கரு)

சகூ. **அவற்றுள்**
**ரகார ழகாரங் குற்றொற் றாகா.**

இது, ரகார ழகாரங்கட்கு எய்தியது ஒருமருங்கு மறுத்தல் நுதலிற்று.

இ-ள் :—அவற்றுள்-மேற்கூறப்பட்ட மூன்றனுள்ளும், ரகாரம் ழகாரம் குற்று ஒற்று ஆகா-ரகாரமும் ழகாரமும் குறிற்கீழ் ஒற்றாகா.

அவை நெடிற்கீழ் ஒற்றும் ; குறிற்கீழ் உயிர்மெய்யாம்.

உ-ம். தார், தாழ் என நெடிற்கீழ் ஒற்றாய்நின்றன. கரு மழு எனக் குறிற்கீழ் உயிர்மெய்யாய் நின்றன.

இவ்வாறு விலக்கினமையின், யகரம் பொய் எனவும் நோய் எனவும் இரண்டிடத்தும் ஒற்றாயிற்று. குற்றொற்று என்பது குறிதாகிய ஒற்று எனப் பண்புத்தொகை. குறிற்கீழ் நிற்றலான், குறியது எனப்பட்டது. ஈண்டுக் குறில் நெடில் என்கின்றது மொழிமுதல் எழுத்தினை என உணர்க. இது மேல் வரையறை இல எனப்பட்ட உயிரும் மெய்யும் மயங்கும் மயக்கத்திற்கு ஓர் வரையறை கண்டு கூறினவாறு. (சக)

ருய. குறுமையு நெடுமையு மளவிற் கோடலிற்
றொடர்மொழி யெல்லா நெட்டெழுத் தியல.

இ-ள் :—குறுமையும் நெடுமையும் அளவின் கோடலின்-உயிரெழுத்திற்குக் குறுமையும் நெடுமையும் அளவிற் கொள்ளப்படுதலில், தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல - தொடர்மொழிக்கீழ் நின்ற ரகார ழகாரங்களெல்லாம் நெடிற்கீழ் நின்ற ரகார ழகாரங்களின் இயல்பையுடைய (என்றுகொள்ளப்படும்).

உ-ம். அகர், புகர், அகழ், புகழ் எனக் கொள்க.

'புலவர்' என்றாற்போல இரண்டுமாத்திரையை இறந்ததன் பின்னும் வருமாலெனின், அவையும் "தன்னின முடித்தல்" என்பதனால் 'நெடிற்கீழ் ஒற்று' எனப்படும். எல்லாம் என்றதனன், ரகார ழகாரங்களேயன்றி, பிற ஒற்றுக்களும் 'நெடிற்கீழ் ஒற்று' எனப்படும். இதனனே, விரல் தீது என்புழி லகரம் 'நெடிற்கீழ் ஒற்று' என்று கெடுக்கப்படும். (கஎ)

ருக. செய்யு ளிறுதிப் போலு மொழிவயின்
னகார மகார மீரொற் றாகும்.

இது, செய்யுட்கண் ஈரொற்று உடனிலை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—செய்யுள் இறுதி போலும் மொழிவயின் - செய்யுள் இறுதிக்கண் 'போலும்' என்னும் மொழிக்கண், னகாரம் மகாரம் ஈர் ஒற்று ஆகும்-னகாரமும் மகாரமும் வந்து ஈரொற்று உடனிலையாய் நிற்கும். ['போலி' எனவும் பாடம்.]

உ-ம். "எம்மொடு தம்மைப் பொருஉங்காற் பொன்னொடு, கூவிளம் பூத்தது போன்ம்" எனவரும். (கஅ)

ருஉ. ணகார முன்னர் மகாரங் குறுகும்.

இஃது, "அரையளபு குறுகன் மகர முடைத்து" [நூன்மரபு-கங] என்பதற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ணகாரம் முன்னர் மகாரம் குறுகும்-(மேற்கூறப்பட்ட) ணகாரத்து முன்வந்த மகாரம் மாத்திரை குறுகிநிற்கும். (கக)

**௫௩. மொழிப்படுத் திசைப்பினுந் தெரிந்துவே றிசைப்பினும்
எழுத்திய றிரியா வென்மனார் புலவர்.**

இது, எழுத்துக்கட்கு மொழிக்கண் மாத்திரை காரணமாகப் பிறப்பதோர் ஐயந் தீர்த்தல் நுதலிற்று.

இ-ள்:—மொழிப்படுத்து இசைப்பினும்-மொழிக்கண்படுத்துச் சொல்லினும், தெரிந்து வேறு இசைப்பினும்-தெரிந்துகொண்டு வேறே சொல்லினும், எழுத்து இயல் திரியா என்மனார் புலவர்-உயிரும் மெய்யுமாகிய எழுத்துக்கள் (பெருக்கம் சுருக்கம் உடையனபோன்று இசைப்பினும்,) தத்தம் மாத்திரை இயல்பில் திரியா என்றுசொல்லுவர் புலவர்.

உ-ம். அஃகல், அ எனவும், ஆல், ஆ எனவும், கடல், க எனவும், கால், கா எனவும் கண்டுகொள்க.

வேறு என்றதனான், எடுத்தல் படுத்தல் முதலிய ஓசை வேற்றுமைக்கண்ணும் எழுத்தியல் திரியா வென்பது கொள்க. (௨௰)

**௫௪. அகர இகர மைகார மாகும்.**

இது, போலி எழுத்து ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—அகரம் இகரம்-அகரமும் இகரமும் கூட்டிச்சொல்ல, ஐகாரம் ஆகும்-ஐகாரம்போல ஆகும்.

உ-ம். ஐயர், அஇயர் எனவரும். அது கொள்ளற்க. (௨௧)

**௫௫. அகர உகர மௌகார மாகும்.**

இதுவும் அது.

இ-ள்:—அகரம் உகரம்-அகரமும் உகரமும் கூட்டிச்சொல்ல, ஔகாரம் ஆகும்-ஔகாரம்போல ஆகும்.

உ-ம். ஔவை, அஉவை எனக் கண்டுகொள்க. [அது கொள்ளற்க] (௨௨)

**௫௬. அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்.**

இதுவும் அது.

இ-ள்:—அகரத்து இம்பர் யகரப் புள்ளியும்-அகரத்தின்பின்னர் இகரமேயன்றி யகரமாகிய புள்ளியும், ஐ என் நெடுஞ்சினை-ஐ எனப்பட்ட நெட்டெழுத்தாம். மெய்பெறத் தோன்றும்-அதனை வடிவுபெறத் தோன்றும்.

உ-ம். ஐவனம், அய்வனம் எனவரும்.

'மெய்பெறத் தோன்றும்' என்றதனான், (அகரத்தின் பின்னர் உகரமேயன்றி) வகரப்புள்ளியும் ஔகாரம்போல வருமெனக்கொள்க என்றவாறு.

[இச்சூத்திரம்,

“அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்”

என்றிருத்தல் வேண்டும்.

இ-ள் :—அகரத்து இம்பர் யகரப் புள்ளியும் வகரத்தின் பின்னர் யகர வொற்றும் வகர வொற்றும், ஐ ஒள நெடுஞ்சினை-ஐகாரம் ஒளகாரம் என்னும் நெட்டெழுத்தாம். மெய் பெற தோன்றும்-(அவை) வடிவு பெறத் தோன்றும்.

உ-ம். ஐயவி, அய்யவி ; ஒளவை, அவ்வை.

'மெய் பெறத்தோன்றும்' என்றதனல், அவற்றைக் கொள்க என்றவாறு.

காலப் பழைமையில் ஏடு பெயர்த்து எழுதினோர் 'யவகரப்புள்ளி' என்பதனை 'யகரப்புள்ளி' எனவும் 'ஐயௌ நெடுஞ்சினை' என்பதனை 'ஐயெ னெடுஞ்சினை' எனவும் பிழைபாக எழுதினர் போலும். அப்பிழைப்பாடத்தைப் பிழையற்ற பாடமெனக் கருதி உரையாசிரியர் அதற்குத் தக்கவாறு உரையெழுதிச் சென்றனர் போலும்.] (உ௩)

௫௭. ஓரள பாகு மிடனுமா ருண்டே
தேருங் காலை மொழிவயி னான.

இச்சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், உயிர்களுள் ஒன்றற்கு மாத்திரைச் சுருக்கம் கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—தேருங்காலை மொழிவயின் ஓர் அளபு ஆகும் இடனும் உண்டு-ஐகாரம் ஆராயுங்காலத்து மொழிக்கண் ஓர் அளவாய் நிற்கும் இடமும் உண்டு.

உ-ம். இடையன், மடையன் எனவரும்.

தேருங்காலை என்றதனுன் முதற்கண் சுருங்காதென்பது கொள்க. இடன் என்றதனுன் இக்குறுக்கம் சிறுபான்மை யென்பது கொள்க.

[இச்சூத்திரத்திற்குப் பின்வருமாறு உரைத்தலே பொருத்தமுடைத்து :—

இஃது, உயிர்களுள் இரண்டற்கு மாத்திரைச்சுருக்கம் கூறுதல் நுதலிற்று.

இ-ள் :-தேரும் காலை மொழிவயின் ஆன-ஆராயுங்காலத்து மொழிக்கண் நின்ற ஐகார ஒளகாரங்கள், ஓர் அளபு ஆகும் இடனும் உண்டு-ஓர்அளபாய்நிற்கும் இடமும் உண்டு.

'தேருங்காலை' என்றதனுன், தனியே நின்ற ஐகாரமும் ஒளகாரமுமே ஒரு மாத்திரை யாகு மென்றுகொள்க.

உ-ம். பை, மை, கை ; கௌ, சௌ, வௌ.

'இடனும்' என்றதனுன் இக்குறுக்கம் சிறுபான்மை யென்பது கொள்க. ஆர் என்பன அசைகள்.

மேல், "யகரப் புள்ளியும் ஐயெ னெடுஞ்சினை" என்ற பிழைப்பாடத்தைப் பிழையற்ற பாடமெனக் கொண்டதால் உரையாசிரியர் ஈண்டு ஒளகாரத்தைக் கூறாது ஐகாரம் ஓர் அளபாய் நிற்கும் இடமும் உண்டு என்று உரைத்துச் சென்றனர் போலும்.] (உ௪)

௫௮. இகர யகர மிறுதி விரவும்.

இதுவும் ஓர் போலியெழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—இறுதி இகர யகரம் விரவும்-இகரவீற்று மொழிக்கண் யகரமும் (அதுபோல) இகரமும் விரவிவரும்.

உ-ம். நாய் நாஇ எனக் கண்டுகொள்க. [விரவும் என்றதனுல், அவையிரண்டும் கொள்க என்றவாறு.] (உ௫)

**ருசு. பன்னீ ருயிரு மொழிமுத லாகும்.**

இஃது, உயிரெழுத்து மொழிக்கு முதலாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—பன்னீர் உயிரும் மொழிமுதல் ஆகும்-பன்னிரண்டு உயிரெழுத்தும் மொழிக்கு முதலாம்.

உ-ம். அடை, ஆடை, இடை, ஈயம், உரல், ஊர்தி, எழு, ஏணி, ஐவனம், ஒளி, ஓளி, ஔவியம் எனவரும். (உசு)

**சுய. உயிர்மெய் யல்லன மொழிமுத லாகா.**

இஃது, [உயிர்] மெய்யெழுத்து மொழிக்கு முதலாம் ஆறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—உயிர்மெய் அல்லன மொழி முதல் ஆகா-உயிரொடுகூடிய மெய்யல்லாதனவாகிய தனிமெய்கள் மொழிக்கு முதலாகா உயிரொடுகூடிய மெய்கள் மொழிக்கு முதலாம்.

ஈண்டு உயிர்மெய் யென்பது வேற்றுமைநயம் கருதி யெனவுணர்க. ஈண்டு ஒற்றுமை கருதில், "கதநப மவெனு மாவைந் தெழுத்தும், எல்லா வுயிரொடுஞ் செல்லுமார் முதலே" [மொழிமரபு-உஅ] எனச் சூத்திரம் சுருங்க வருவதன்றி, இதனாற் சொல்லப்பட்ட அறுபது உயிர்மெய்யினை எடுத்தோத வேண்டிச் சூத்திரம் பரக்கவரு மென்பது

[[‘சுருங்க ஓதுமன்றி’ எனவும், ‘ஓதவேண்டில்’ எனவும் முந்திய அச்சுப் பிரதியிலும் ஏட்டுப் பிரதிகளிலும் காணப்படும் (உரைப்) பாடம் ஏடுபெயர்த்தெழுதினோரால் நேர்ந்த பிழை போலும்]] (உஎ)

**சுக. கதந பமவெனு மாவைந் தெழுத்தும்**
**எல்லா வுயிரொடுஞ் செல்லுமார் முதலே.**

இது, மேல் முதலாம் என்னப்பட்ட உயிர்மெய்கட்கு வரையறை கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—கதநபம எனும் அ ஐந்து எழுத்தும்-கதநபம என்றுசொல்லப்பட்ட ஐந்து தனிமெய்யெழுத்தும், எல்லா உயிரொடும் முதல் செல்லும்-பன்னிரண்டு உயிரோடும் மொழிக்கு முதலாதற்குச் செல்லும்

உ-ம் கலை, காரி, கிளி, கீரி, குடி, கூடு, கெண்டை, கேழல், கைதல், கொண்டல், கோடை, கௌவை எனவும், தந்தை, தாடி, திற்றி, தீமை, துணி, தூணி, தெற்றி, தேவர், தையல், தொண்டை, தோடு, தௌவை எனவும், நடம், நாரை, நிலம், நீர், நுழை, நூல், நெய்தல், நேயம், நைகை, நொய்யன, நோக்கம், நௌவி எனவும், படை, பாடி, பிடி, பீடம், புகழ், பூழி, பெடை, பேடி, பைதல், பொன், போதகம், பௌவம் எனவும், மடம், மாலை, மிடறு, மீனம், முகம், மூதூர், மெலிந்தது, மேனி, மையல், மொழி, மோதகம், மௌவல் எனவும் வரும்.

‘முதற்கு’ என்பதன் நான்காம் உருபு விகாரத்தாற் றொக்கது. [ஆர் என்பது அசை. ஏகாரம் ஈற்றசை.] (உஅ)

**சுஉ. சகரக் கிளவியு மவற்றோ ரற்றே**
**அ ஐ ஔவெனு மூன்றலங் கடையே.**

இதுவும் அது.

இ-ள் :—சகர கிளவியும் அவற்று ஓர் அற்று-சகரமாகிய எழுத்தும் மேற் சொல்லப்பட்டவைபோல எல்லா உயிரோடும் மொழிக்கு முதலாம், அ ஐ ஔ எனும் மூன்று அலங்கடை-அ ஐ ஔ என்னும் மூன்றும் அல்லாவிடத்து.

உ-ம். சாலே, சிலே, சீறுக, சுரும்பு, சூழ்க, செய்கை, சேவடி, சொறிக, சோறு, என வரும்.

(1) சகடம் எனவும், சையம் எனவும் விலக்கினவும் வருமாலெனின், அவற்றுள் ஆரியச்சிதை வல்லாதன "கடிசொல் வில்லே" என்பதனுற் கொள்க. [ஏகாரம் இரண்டும் ஈற்றசைகள். இந்நூல் மூலத்தில் 'ஓர் அன்ன,' 'ஓர்அற்று' என்று வரும், இடங்களில் 'ஓர்' என்பதனை அசையென்று கொள்ளுதல் பொருத்தமுடையதாகத் தோற்றுகின்றது.] (உகூ)

௩௰. உ ஊ ஒ ஓ வென்னு நான்குயிர்
வ என் னெழுத்தொடு வருத லில்லே.

இதுவும் அது.

இ-ள் :—உ ஊ ஒ ஓ என்னும் நான்கு உயிர்-உ ஊ ஒ ஓ என்று சொல்லப் படுகின்ற நான்கு உயிரும், வ என் எழுத்தொடு வருதல் இல்லே-வ என்னும் மெய் யெழுத்தோடு மொழிமுதலில் வருதலில்லே.

பிற உயிர்கள் வரும்.

உ-ம். வளே, வாளி, விளரி, வீடு, வெள்ளி, வேர், வையம், வௌவு எனவரும். ()

௩௪. ஆ எ
ஒ எனு மூவுயிர் ஞகாரத் துரிய.

இதுவும் அது.

இ-ள் :—ஆ எ ஒ எனும் மூ உயிர் ஞகாரத்து உரிய-ஆ எ ஒ என்று சொல் லப்படும் மூவுயிர்கள் ஞகார ஒற்றோடு முதலாதற்கு உரிய. பிற உயிர் உரியவல்ல.

உ-ம். ஞாலம், ஞெகிழி, ஞொள்கிற்று எனவரும்.

ஞழியிற்று என்றாற்போல்வன விலக்கினவும் வருமாலெனின், அவை அழி வழக்கென்று மறுக்க. (௩க)

௩ரு. ஆவோ டல்லது யகரமுத லாது.

இதுவும் அது.

இ-ள் :—ஆவோடு அல்லது யகரம் முதலாது-ஆகாரத்தோடு அல்லது யகர முதலாகாது.

உ-ம். யாண் எனவரும்.

யவனர் என்றாற்போல்வன விலக்கினவும் வருமாலெனின், அவை ஆரியச் சிதைவென்று மறுக்க. (௩உ)

௩௩. முதலா வேன தம்பெயர் முதலும்.

இது, மொழிக்கு முதலாகாதனவும் ஒரோவழி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—முதலா என-மொழிக்கு முதலாகாத ஒழிந்த மெய்களும், தம் பெயர் முதலும்-(அவ்வெழுத்துக்கள்) தம் பெயர் கூறுதற்கு முதலாம்.

முதலாயின மெய் கதநபமக்களும், வகரமும், சகரமும், ஞகரமும், யகரமும் என இவை. முதலாகாத மெய் ஙகரமும், டகரமும், ணகரமும், ரகரமும், லகரமும, ழகரமும், ளகரமும், றகரமும், னகரமும் என இவை.

அவை தம் பெயர்க்கு முதலாமாறு :—ஙக்களைந்தார், டப்பெரிது, ணந்நன்று என்றாற்போல ஒட்டிக்கொள்க.

இனி 'என' என்றதனான், முதலாம் என்னப்பட்ட ஒன்பது உயிர்மெய்யும் பன்னிரண்டு உயிரும் தம்பெயர் கூறும்வழியும் மொழிக்கு முதலாம் எனக்கொள்க.

கக்களைந்தார், தப்பெரிது, அக்குறிது, ஆவலிது என்றாற்போல ஒட்டிக்கொள்க. (௬௬)

௬௭. **குற்றிய லுகர முறைப்பெயர் மருங்கின்**
**ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்.**

இது, குற்றியலுகரம் மொழிக்கு முதலாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—குற்றியலுகரம் முறைப்பெயர் மருங்கின்-குற்றியலுகரம் முறைப் பெயரிடத்து, ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்-ஒற்றாய்நின்ற நகரத்தின் மேலாய நகரத்தோடு மொழிக்கு முதலாம்.

நுந்தை எனவரும்.

இவ்வாறு முதலாக்கம் கூறவே, மொழிமுதற் குற்றியலுகரத்திற்கு இடமும் பற்றுக்கோடும் கூறியவா றாயிற்று. இடம் நுந்தை என்னும் முறைப்பெயர். பற்றுக்கோடு நகரமிசை நகரம். [நகரமிசை நகரம்-நகர ஒற்றின் மேலுள்ள நகர ஒற்று.] (௬௭)

௬௮. **முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅ**
**தப்பெயர் மருங்கி னிலையிய லான.**

இது, மேலதற்கு ஓர் புறனடை.

இ-ள் :—முற்றியலுகரமொடு பொருள் வேறுபடாது-(அம் முதற்கட் குற்றியலுகரம் ஆண்டு இதழ்குவித்துக் கூறும்வழி) முற்றுகரத்தோடு பிற உகரம்போலப் பொருள் வேறுபடாது; (யாண்டெனின்,) அப்பெயர் மருங்கின் நிலை இயலான்-அம் முறைப்பெயரிடத்துத் தான் நிற்றற்கண்.

நாகு எனவும், நகு எனவும் குறுகியும், குறுகாதும் நின்ற உகரங்கள்போல, நுந்தை என்று குறுக்கமாயவழியும், இதழ்குவித்துக்கூறக் குறுகாதவழியும், பொருள் வேறுபடாதவாறு அறிக.

இனி "இரட்டுறமொழிதல்" என்பதனால், பொருள் என்றதனை இடனும் பற்றுக்கோடும் ஆக்கி, பிற உகரங்கள்போல ஈண்டை உகரங்கள் இடனும் பற்றுக்கோடும் வேறுபடா என்பது கொள்க. [ஈற்றகரம் சாரியை.] (௬௮)

௬௯. **உயிர் ஔ வெஞ்சிய விறுதி யாகும்.**

இஃது, உயிர் மொழிக்கு ஈறுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—உயிர் ஔ எஞ்சிய இறுதி ஆகும்-உயிரெழுத்துக்களுள் ஔகாரம் ஒழிந்தவை மொழிக்கு ஈறாம். ஔகாரந்தான் ஈறாகாது.

இஃது உயிர்க்கும் உயிர்மெய்க்கும் பொது.

ஆஅ, ஆ, ஈஇ, ஈ, ஊஉ, ஊ, ஏஎ, ஏ, ஐஇ, ஐ, ஓஒ, ஓ என உயிர் ஈருயின. இவற்றுட் குற்றெழுத்தைந்தும் அளபெடைவகையான் ஈருயின.

உயிர்மெய்களும் மேல்வரையறை கூறுதனவாகிய அகர ஆகார இகர ஈகார ஐகாரங்களோடு இயைந்தன ஈண்டே கொள்க.

உ-ம். விள, பலா, கிளி, குரீ, பனை எனவரும். (௬௯)

௭0 கவவோ டியையி னௌவு மாகும்.

இஃது, ஈருகா தென்ற ஔகாரம் இன்னுழி ஆம் என்கின்றது.

இ-ள் :—க வ ஓடு இயையின்-ககர வகரமாகிய மெய்களோடு பொருந்தின், ஔ உம் ஆகும்-முன்ஈருகா தென்ற ஔகாரமும் ஈரும்.

உ-ம். கௌ, வௌ எனவரும். (௭0)

௭க. எ என வருமுயிர் மெய்யீ ருகாது.

இஃது, எகரம் தானே நின்றவழியன்றி மெய்யோடுகூடி ஈருகாதென வரையறை கூறுதல் நுதலிற்று.

இ-ள்:—எ என வரும் உயிர்-எ என்றுசொல்ல வரும் உயிர், மெய் ஈறு ஆகாது- தானே ஈருவதன்றி மெய்யோடு இயைந்து ஈருகாது. (௭க)

௭உ. ஒவ்வு மற்றே நவ்வலங் கடையே.

இதுவும் வரையறை.

இ-ள் :—ஒவ்வும் அற்று-ஒகரமும் தானேநின்று ஈருவதன்றி மெய்யோடு இயைந்து ஈருகாது, ந அலங்கடை-நகரமெய்யோ டல்லாத விடத்து. (௭உ)

௭௩. ஏ ஓ எனுமுயிர் ஞகாரத் தில்லை.

இதுவும் வரையறை.

இ-ள் :—ஏ ஓ எனும் உயிர் ஞகாரத்து இல்லை-ஏ ஓ என்றுசொல்லப்படும் உயிர் (தாமே நின்றும் பிறமெய்களோடு நின்றும் ஈருவதன்றி) ஞகரத்தோடு ஈருவதில்லை.

தாமேயாதல் முன்னே காட்டப்பட்டது. பிறமெய்களோடு ஈருவனவற்றுள் வழக்கிறந்தனவொழிய இறவாதன வந்தவழிக் கண்டுகொள்க. (௭௩)

௭௪. உ ஊ கார நவ்வொடு நவிலா.

இதுவும் வரையறை.

இ-ள் :—உ ஊகாரம் ந வ ஒடு நவிலா-உ ஊகாரங்கள் (தாமே நின்றும் பிற மெய்களோடு நின்றும் பயில்வதன்றி) நகர வகரங்களோடு பயிலா.

தாமே ஈருதல் மேலே காட்டப்பட்டது. பிற மெய்களோடு ஈருமவற்றுள், வழக்கிறந்தனவல்லாதன வந்தவழிக் கண்டுகொள்க. 'நவிலா' என்றதனுற் சிறுபான்மை நொவ்வும் கவ்வும் என [உகரம்] வகாரத்தோடு ஈருதல் கொள்க. இன்னும் இதனானே சிறுபான்மை நகரத்தோடு வரவு உண்டேனும் கொள்க. (௭௪)

எரு. உச்ச கார மிருமொழிக் குரித்தே.

இதுவும் ஒரோவழி வரையறை.

இ-ள் :—உச்சகாரம் இரு மொழிக்கு உரித்து-உகரத்தோடு கூடிய சகரம் இரு மொழிக்கு ஈறாகும் (பலமொழிக்கு ஈறாகாது).

உ-ம். உசு, முசு எனவரும். பசு வென்பது ஆரியச்சிதைவு. (சஉ)

எசு. உப்ப கார மொன்றென மொழிப
இருவயி னிலையும் பொருட்டா கும்மே.

இதுவும் மொழிவரையறையும் மொழியது பொருள்பாடும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—உப்பகாரம் ஒன்று என மொழிப-உகரத்தோடு கூடிய பகரம் ஒரு மொழிக்கு ஈறும் என்று சொல்லுவர். இருவயின் நிலையும் பொருட்டுஆகும்-அது தான் தன்வினை பிறவினை என்னும் இரண்டிடத்தும் நிலைபெறும் பொருண்மைத் தாம்.

உ-ம். தபு எனவரும். இது படுத்துச்சொல்ல, நீ சா எனத் தன்வினையாம். எடுத்துச்சொல்ல, நீ ஒன்றனைச் சாவி எனப் பிறவினையாம். [ஏகாரம் ஈற்றசை.] (சங)

எஎ. எஞ்சிய வெல்லா மெஞ்சுத லிலவே.

இது, மொழிக்கு ஈறாகா உயிர்மெய்யும் ஒரோவழி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—எஞ்சிய எல்லாம் எஞ்சுதல் இல-மொழிக்கு ஈறாகாது நின்ற உயிர்மெய்களெல்லாம் தம்பெயர் கூறும்வழி ஈறாதற்கு ஒழிபு இல.

எஞ்சிய உயிர்மெய்யாவன: ஔகாரம் ககார வகாரங்களை ஒழிந்த மெய்யோடு இயைந்த உயிர்மெய்யும், எகரம் எல்லாமெய்யோடும் இயைந்த உயிர்மெய்யும், ஒகரம் நகரம் ஒழிந்த மெய்யோடு இயைந்த உயிர்மெய்யும், ஏகார ஓகாரம் ஞகாரத்தோடு இயைந்த உயிர்மெய்யும், உ ஊகாரம் நகர வகரங்களோடு இயைந்த உயிர்மெய்யும் என இவை.

தம் பெயர்க்கு [ஈறு] ஆமாறு: வெளக் களைந்தார் எனவும், கெக் களைந்தார் எனவும், கொக் களைந்தார் எனவும், ஞேக் களைந்தார் எனவும், ஞோக்களைந்தார் எனவும், நுக் களைந்தார் எனவும், நூக் களைந்தார் எனவும், வுக் களைந்தார் எனவும், வூக் களைந்தார் எனவும்வரும். எல்லாம் என்றதனன், மொழிக்கு ஈறாய்நின்ற உயிர்மெய்களும் தம்பெயர் கூறும்வழியும் ஈறும் என்றுகொள்க. கக் களைந்தார், கா வலிது எனவும், அக் களைந்தார், ஆ வலிது எனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. தன்னை உணர நின்றவழி, மொழிகட்கு இது கருவியாக ஈற்றகத்து முடிபு ஒன்றினமுடித்தலாற் கொள்க. (சச)

எஅ. ஞணநம னயரல வழள வென்னும்
அப்பதி னொன்றே புள்ளி யிறுதி.

இது, தனிமெய்களுள் மொழிக்கு ஈறுவன கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும் அ பதினொன்றே-ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்று கூறப்பட்ட அப்பதினொன்றுமே, புள்ளி இறுதி-புள்ளிகளில் மொழிக்கு ஈறுவன.

உ-ம். உரிஞ், மண், பொருந், திரும், பொன், வேய், வேர், வேல், தெவ், வீழ் வேள் எனவரும். னகாரத்தை ஈற்று வையாது, மகரத்தோடு வைத்தது அதன் மயக்க இயைபு நோக்கி என்றுணர்க. (சரு)

எசு. உச்ச காரமொடு நகாரஞ் சிவணும்.

இதுவும் மொழிவரையறை.

இ-ள் :—உச் சகாரமொடு நகாரம் சிவணும்-உகரத்தோடுகூடிய சகாரத்தோடே நகாரம் பொருந்தி அஃது இருமொழிக்கு ஈறுய வாறுபோல தானும் இருமொழிக்கு ஈறும்.

உ-ம். பொருந், வெரிந் எனவரும்.

[உகரத்தோடு கூடிய சகரம் இருமொழிக்கு ஈறுயவாறுபோல நகரம் இருமொழிக்கு ஈறும் என்க.] (சசு)

அய. உப்ப காரமொடு ஞகாரையு மற்றே
அப்பொரு ளிரட்டா திவணை யான.

இதுவும் மொழிவரையறை.

இ-ள் :—உப்பகாரமொடு ஞகாரையும் அற்று - உகரத்தோடுகூடிய பகரத்தோடு ஞகாரமும் அத்தன்மைத்தாய் ஒருமொழிக்கு ஈறும். இவணையான அ பொருள் இரட்டாது-இவ்விடத்ததன்பொருள் அவ்வுப்பகரம்போல இருபொருள் படாது.

உ-ம். உரிஞ் எனவரும்.

ஞகாரம் ஒருமொழிக்கு ஈறுதலின், பகரத்தின்பின் கூறப்பட்டது. [ஏகாரம் ஈற்றசை.] (சஎ)

அக. வகரக் கிளவி நான்மொழி யீற்றது.

இதுவும் மொழிவரையறை.

இ-ள் :—வகரக் கிளவி நான்மொழி ஈற்றது-வகரமாகிய எழுத்து நான்கு மொழி ஈற்றதாம்.

உ-ம். அவ், இவ், உவ், தெவ் எனவரும். (சஅ)

அஉ. மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த
னகரத் தொடர்மொழி யொன்பஃ தென்ப
புகரறக் கிளந்த வஃறிணை மேன.

இதுவும் ஒரோவழி மொழிவரையறை.

இ-ள் :—புகர் அற கிளந்த அஃறிணைமேல்-குற்றம் அறச் சொல்லப்பட்ட அஃறிணையிடத்து, மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த-மகரவீற்றுத் தொடர்மொழியோடு மயங்காதென்று வரையறுக்கப்பட்ட, னகரத் தொடர்மொழி ஒன்பஃது என்ப-னகரவீற்றுத் தொடர்மொழி ஒன்பதென்று சொல்லுவர்.

உ-ம் :—நிலன், நிலம், பிலம், பிலன் என்றாற்போல்வன மயங்குவன.

இனிமயங்காதன உகின், செகின், விழன், பயின், அழன், புழன், குயின், கடான், வயான் எனவரும்.

இவற்றுள் திரிபுடையன களைக. ஒன்பஃது என்னும் ஆய்தம் செய்யுள்விகாரம். அஃறிணையென்றது ஈண்டு அஃறிணைப் பெயரினை. (சகூ)

இரண்டாவது மொழிமரபு முற்றிற்று.

## மூன்றாவது பிறப்பியல்

இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், எழுத்துக்களது பிறப்பு உணர்த்தினமையின் பிறப்பியல் என்னும் பெயர்த்து. இதனை நூன்மரபின் பின்னே வைக்கவெனின், சார்பிற்றோற்றத்தெழுத்தும் தனிமெய்யும் மொழிமரபிடை உணர்த்தி [ப் பிறப்பு] உணர்த்தவேண்டுதலின், மொழிமரபின் பின்னதாயிற்று.

அங. **உந்தி முதலா முந்துவளி தோன்றித்**
**தலையினு மிடற்றினு நெஞ்சினு நிலைஇப்**
**பல்லு மிதழு நாவு மூக்கும்**
**அண்ணமு முளப்பட வெண்முறை நிலையான்**
**உறுப்புற் றமைய நெறிப்பட நாடி**
**எல்லா வெழுத்துஞ் சொல்லுங் காலைப்**
**பிறப்பி னாக்கம் வேறுவே றியல**
**திறப்படத் தெரியுங் காட்சி யான.**

இத் தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், எழுத்துக்களது பொதுப் பிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—எல்லா எழுத்தும் நெறிப்பட நாடி சொல்லும் காலை-தமிழெழுத்துக்களெல்லாம் ஒருவன் முறைப்பட ஆராய்ந்து தம்மைச் சொல்லுங்காலத்து, உந்தி முதலா முந்து வளி தோன்றி-கொப்பூழ் அடியாக மேலே கிளர்கின்ற உதானன் என்னும் பெயரையுடைய வாயுத் தோன்றி, தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇ - தலையின்கண்ணும் மிடற்றின்கண்ணும் நெஞ்சின்கண்ணும் நிலைபெற்று, பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான் உறுப்பு உற்று அமைய-(தலையும் மிடறும் நெஞ்சும் என்னும் மூன்றனோடும்) பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் உளப்பட எட்டாகிய முறைமையையுடைய இடங்களில் ஓர் உறுப்போடு ஓர் உறுப்புத் தம்மிற்பொருந்தி அமைதி பெற, பிறப்பின் ஆக்கம் வேறு வேறு இயல-பிறப்பினது ஆக்கம் வேறு வேறு புலப்பட்டு வழங்குதலுடைய, திறப்படத் தெரியும் காட்சியான்-கூறுபாடுளதாக ஆராயும் அறிவிடத்து.

[ இதழ்போறலான் வாய் இதழெனப்பட்டது. எல்லா எழுத்தும் என்னும் எழுவாய்க்குப் 'பிறப்பினாக்கம் வேறுவேறு இயல' என்பதனை ஒருசொன்னீர்மைப் படுத்திப் பயனிலை யாக்குக. ['முதலாக' என்பது ஈறு கெட்டு நின்றது. ஈற்ற கரம் சாரியை.] (க)

அச. **அவ்வழிப்**
**பன்னீ ருயிருந் தந்நிலை திரியா**
**மிடற்றுப் பிறந்த வளியி னிசைக்கும்.**

இஃது, உயிரெழுத்திற்குப் பொதுப்பிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அ வழி-அவ்விடத்து, பன்னிரு உயிரும் தம் நிலை திரியா-பன்னிரண்டு உயிரெழுத்தும் தத்தம் நிலையில்திரியாவாய், மிடற்று பிறந்த வளியின் ஒலிக்கும்-மிடற்றின்கட் பிறந்த வளியான் ஒலிக்கும்.

'தந்நிலை திரியா' என்றதனால், குற்றியலிகரம் குற்றியலுகரம் தந்நிலை திரியுமென்பது பெறப்பட்டது. (உ)

௮௫. **அவற்றுள்**

**அ ஆ வாயிரண் டங்காந் தியலும்.**

இஃது, உயிரெழுத்துக்களுட் சிலவற்றிற்குச் சிறப்புப்பிறவி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அவற்றுள்-மேற்சொல்லப்பட்ட உயிர் பன்னிரண்டினுள், அ ஆ அ இரண்டு அங்காந்து இயலும்-அகர ஆகாரங்களாகிய அவ்விரண்டும் அங்காந்து சொல்ல அஃது இடமாகப் பிறக்கும். (௩)

௮௬. **இ ஈ எ ஏ ஐயென விசைக்கும்**

**அப்பா லைந்து மவற்றோ ரன்ன ;**

**அவைதாம்**

**அண்பன் முதனா விளிம்புற லுடைய.**

இதுவும் அது.

இ-ள் :—இ ஈ எ ஏ ஐ என இசைக்கும் அ பால் ஐந்தும்-இ ஈ எ ஏ ஐ என்று சொல்லப்படும் அக்கூற்று ஐந்தும், அவற்று ஓர் அன்ன-மேற்கூறிய அகர ஆகாரங்கள் போல அங்காந்து சொல்லப் பிறக்கும். அவை தாம் பல்அண் நாமுதல்விளிம்பு உறல் உடைய-அவைதாம் (அவ்வாறு சொல்லப் பிறக்குமிடத்துப்) பல்லினது அணிய இடத்தினை நாவினது அடியின் விளிம்பு சென்று உறுதலையுடைய. (௪)

௮௭. **உ ஊ ஒ ஓ ஔவென விசைக்கும்**

**அப்பா லைந்து மிதழ்குவிந் தியலும்.**

இதுவும் அது.

இ-ள் :—உ ஊ ஒ ஓ ஔ என இசைக்கும் அ பால் ஐந்தும்-உ ஊ ஒ ஓ ஔ எனச்சொல்ல இசைக்கும் அக்கூற்று ஐந்தும், இதழ் குவிந்து இயலும்-இதழ் குவித்துச சொல்ல நடக்கும். (௫)

௮௮. **தத்தந் திரிபே சிறிய வென்ப.**

இது, முன்கூறிய உயிர்க்கும் மேற்கூறிய மெய்க்கும் ஓர் புறனடை கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—தம்தம் திரிபு சிறிய என்ப-(எழுத்துக்கள் ஒருதானத்துக் கூடிப் பிறக்குமெனப்பட்டன. அவ்வாறு கூடிப்பிறப்பினும்,) தத்தம் வேறுபாடுகளைச் சிறிய வேறுபாடுகளென்று சொல்லுவர்.

அவ்வேறுபாடு அறிந்துகொள்க. [ஏகாரம் அசை.] (௬)

அ௬. ககார ஙகார முதனா வண்ணம்.

இது, மெய்களுட் சிலவற்றிற்குப் பிறவி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ககாரம் ஙகாரம் நாமுதல் அண்ணம்(முதல்)-ககாரமும் ஙகாரமும் நாமுதலும் அண்ணமுதலும் உறப் பிறக்கும். (எ)

௯௰. சகார ஞகார மிடைநா வண்ணம்.

இதுவும் அது.

இ-ள் :—சகாரம் ஞகாரம் நாஇடை அண்ணம் (இடை)-சகாரமும் ஞகாரமும் நாவது இடையும் அண்ணத்தது இடையும் உறப் பிறக்கும். (அ)

௯௧. டகார ணகார நுனிநா வண்ணம்.

இதுவும் அது.

இ-ள் :—டகாரம் ணகாரம் நாநுனி அண்ணம் (நுனி)-டகாரமும் ணகாரமும் நாவது நுனியும் அண்ணத்தது நுனியும் உறப் பிறக்கும். (௯)

௯௨. அவ்வா றெழுத்து மூவகைப் பிறப்பின.

இது, மேலனவற்றிற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அ ஆறு எழுத்தும் மூவகை பிறப்பின-மேற்கூறப்பட்ட ஆறு எழுத்தும் நிரனிறைவகையான் (அறுவகைப் பிறப்பின் அல்ல.) மூவகைப் பிறப்பின. (௰)

௯௩. அண்ண நண்ணிய பன்முதன் மருங்கின்
நாநுனி பரந்து மெய்யுற வொற்றத்
தாமினிது பிறக்குந் தகார நகாரம்.

இதுவும் மெய்களிற் சிலவற்றிற்குப் பிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அண்ணம் நண்ணிய பல் முதல் மருங்கின்-அண்ணத்தைப் பொருந்திய பல்லினது அணிய இடத்தின்கண்ணே, நாநுனி பரந்து மெய் உற ஒற்ற-நாவினது நுனி பரந்து வடிவை உறும்படி ஒற்ற, தாம் இனிது பிறக்கும்-தாம் இனிதாகப் பிறக்கும், தகாரம் நகாரம்-தகாரமும் நகாரமும்.

முன்னே 'உறுப்புற்றமைய' என்று வைத்துப் பின்னும் 'மெய்யுற' என்றதனான், எல்லா எழுத்துக்களும் மெய்யுற்றபோதே இனிது பிறப்பதென்பது கொள்க. (௧௧)

௯௪. அணரி நுனிநா வண்ண மொற்ற
றஃகா னஃகா னிரண்டும் பிறக்கும்.

இதுவும் அது.

இ-ள் :—அணரி நுனிநா அண்ணம் ஒற்ற-அணர்ந்து நுனிநா அண்ணத்தைச் சென்று ஒற்ற, றஃகான் னஃகான் அ இரண்டும் பிறக்கும்-றகார னகாரமாகிய அவ்விரண்டும் பிறக்கும்.

இங்குநின்று நெடுங்கணக்கு முறைமை விட்டு நா அதிகாரம்பட்டது கண்டு கூறுகின்றதெனவுணர்க. (௧௨)

**கூரு. நுனிநா வணரி யண்ணம் வருட**
**ரகார ழகார மாயிரண்டும் பிறக்கும்.**

இதுவும் அது.

இ-ள் :—நுனிநா அணரி அண்ணம் வருட-நுனிநா அணர்ந்து அண்ணத்தைத் தடவ, ரகார ழகாரம் அ இரண்டும் பிறக்கும்-ரகார ழகாரமாகிய அவ்விரண்டும் பிறக்கும். (கங)

**கூசு. நாவிளிம்பு வீங்கி யண்பன் முதலுற**
**ஆவயி னண்ண மொற்றவும் வருடவும்**
**லகார ளகார மாயிரண்டும் பிறக்கும்.**

இ-ள் :—நா விளிம்பு வீங்கி பல் அண் முதல் உற-நாவினது விளிம்பு தடித்துப் பல்லினது அணிய இடத்தைப் பொருந்த, அ வயின் அண்ணம் ஒற்ற லகாரமும் வருட ளகாரமும் அ இரண்டும் பிறக்கும்-அவ்விடத்து (முதல்நா) அவ்வண்ணத்தை ஒற்ற லகாரமும் அதனைத் தடவ ளகாரமுமாக அவ்விரண்டும் பிறக்கும். (கச)

**கூஎ. இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்.**

இதுவும் அது.

இ-ள் :—இதழ் இயைந்து பிறக்கும் பகாரம் மகாரம்-கீழ்இதழும் மேல்இதழும் தம்மில் இயையப் பிறக்கும் பகாரமும் மகாரமும். (கரு)

**கூஅ. பல்லித ழியைய வகாரம் பிறக்கும்.**

இதுவும் அது.

இ-ள் :—பல் இதழ் இயைய வகாரம் பிறக்கும்-மேற்பல்லும் கீழ் இதழும் தம்மில் இயைய வகாரம் பிறக்கும். (கசு)

**கூகூ அண்ணஞ் சேர்ந்த மிடற்றெழு வளியிசை**
**கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும்.**

இதுவும் அது.

இ-ள் :—அண்ணம் சேர்ந்த மிடற்று எழு வளி இசை கண் உற்று அடைய யகாரம் பிறக்கும்-அண்ணத்தை நாச் சேர்ந்தவிடத்து மிடற்றினின்றும் எழும் வளியானுய இசை அவ்வண்ணத்தை அணைந்து செறிய யகாரம் பிறக்கும். (கஎ)

**௱. மெல்லெழுத் தாறும் பிறப்பி னாக்கஞ்**
**சொல்லிய பள்ளி நிலையின வாயினும்**
**மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்.**

இது, மெல்லெழுத்திற்கு ஓர் புறநடை கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—மெல்லெழுத்து ஆறும் பிறப்பின் ஆக்கம் சொல்லிய பள்ளி நிலையின ஆயினும்-மெல்லெழுத்துக்களாறும் தத்தம் பிறப்பினது ஆக்கஞ்சொல்லிய இடத்தே நிலைபெற்றன வாயினும், மூக்கின் வளி இசை யாப்புற தோன்றும்-அவை மூக்கின் கண்ணுளதாகிய வளியது இசையான் யாப்புறத் தோன்றும்.

'யாப்புற' என்றதனான், இடையெழுத்திற்கு மிடற்றுவளியும், வல்லெழுத்திற்குத் தலைவளியும் கொள்க. (௧௮)

**௱௧. சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத்**
**தேர்ந்துவெளிப் படுத்த வேனை மூன்றுந்**
**தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி**
**ஒத்த காட்சியிற் றம்மியல் பியலும்.**

இது, சார்பிற்றோற்றத் தெழுத்திற்குப் பிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—சார்ந்துவரின் அல்லது தமக்கு இயல்பு இல என தேர்ந்து வெளிப்படுத்த ஏனை மூன்றும்-சிலவற்றைச் சார்ந்துவரின் அல்லது தமக்குத்தாமே வரும் இயல்பு இலவென்று ஆராய்ந்து வெளிப்படுத்தப்பட்ட ஒழிந்த மூன்றும், தம்தம் சார்பின் பிறப்பொடு சிவணி ஒத்த காட்சியில் தம் இயல்பு இயலும்-தத்தமக்குச் சார்பாகிய எழுத்துக்களது பிறப்பிடத்தே பிறத்தலொடு பொருந்தி பொருந்தின அவ்விடத்தே தமக்குரிய இயல்பில் நடக்கும்.

'ஒத்தகாட்சி' என்றதனான், ஆய்தத்திற்குக் குற்றெழுத்துச் சார்பேயெனினும் தலைவளியாற் பிறத்தலின், உயிரொடு புணர்ந்த வல்லெழுத்துச் சார்பாகவே பிறக்குமென்பது கொள்க. 'தம்மியல்பியலும்' என்றதனான், அளபெடையும் உயிர்மெய்யும் தமக்கு அடியாகிய எழுத்துக்களது பிறப்பிடமே இடமாக வருமென்பது கொள்க. (௧௯)

**௱௨. எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து**
**சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற்**
**பிறப்பொடு விடுவழி யுறழ்ச்சி வாரத்**
**தகத்தெழு வளியிசை யரிறப நாடி**
**யளபிற் கோட லந்தணர் மறைத்தே.**

இஃது, எல்லா எழுத்திற்கும் ஆவதோர் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—எல்லா எழுத்தும்-எல்லா எழுத்துக்களும், வெளிப்பட கிளந்து சொல்லிய பள்ளி-வெளிப்பட விதந்து சொல்லப்பட்ட இடத்தின்கண்ணே, எழுதரு வளியின்-எழுகின்ற வளியானே, பிறப்பொடு விடுவழி-தாம் பிறக்குந் தொழிலுடைய வாதலொடு தம்மைச் சொல்லும் இடத்து, உறழ்ச்சி வாரத்து அகத்து எழு வளி இசை-திரிதருங்கூற்றையுடைய உண்ணின்று எழும் வளியானய இசையை, அரில் தப நாடி-பிணக்கமற ஆராய்ந்து, அளபின் கோடல்-மாத்திரை வரையறையாற் கோடல், அந்தணர் மறைத்து-பார்ப்பார் வேதத்துக்கண்ணது.

உறழ்ச்சி வாரம் என்றது, உந்திமுதலா எழும் வளி தலைகாறும் சென்று மீண்டு நெஞ்சின்கண் நிலைபெறுதலை எனக்கொள்க. வளி என்னாது வளியிசை என்றது, அவ்வாறு நெஞ்சின்கண் நிலைபெறும் அளவும் வளி எனப்படுவது பின்னை நெஞ்சினின்றும் எழுவுழியெல்லாம் வளித்தன்மை திரிந்து எழுத்தாம் தன்மையதாம் என்பது விளக்கிநின்றது. [ஏகாரம் ஈற்றசை.] (௨௰)

**௱௩. அஃதிவ ணுவலா தெழுந்துபுறத் திசைக்கும்**
**மெய்தெரி வளியிசை யளபுநுவன் றிசினே.**

இது, மேற்சூத்திரத்திற்கு ஓர் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அஃது இவண் நுவலாது-(அகத்தெழுவளியிசை அளபிற் கோட-கிய) அதனை இந்நூலிடத்துச சொல்லாது, எழுந்து புறத்து இசைக்கும்-(அ[illegible]னின்று) எழுந்து புறத்துப் போந்து இசைக்கும், மெய் தெரி வளி இசை அளபு-பொருண்மை தெரிகின்ற வளியானாய இசையது மாத்திரையினை, நுவன்றிசின்-யான் ஈண்டுக் கூறினேன்.

மற்று, இஃது "அளபிற் கோட லந்தணர் மறைத்து" [மொழிமரபு-உ௰] எனவே பெறப்பட்ட தன்றோவெனின், "அந்தணர் மறைத்து" என்பது பிறன் கோட் கூறுதற்கும், பிறன்கோட் கூறி நேர்ந்து உடம்படுதற்கும் ஒப்பக்கிடந்தமையின் அவ்வையம் தீர்தற்குக் கூறினாரென்பது. புறத்து இசைப்பதன் முன்னர், அகத்து இசைக்கும் வளி யிசையை அம்மறைக்கண் ஓர் எழுத்திற்கு மூன்று நிலை உளதாகக் கூறும் [அதன் ஆசிரியன்]. அஃது ஆமாறு அறிந்துகொள்க. 'மெய்தெரி' என்றதனான், முற்கு முதலிடன முயற்சியாற் பிறக்குமெனினும், பொருள் தெரியா நிலைமைய வாகலின் அவற்றிற்கு அளபு கூறாராயினா ரென்பது பெறப்பட்டது. 'நுவன்றிசின்' என்பது ஈண்டு இறந்தகாலத் தன்மைவினை. (உ௰)

மூன்றாவது பிறப்பியல் முற்றிற்று.

---

## நான்காவது - புணரியல்

இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின், மொழிகள், (மேற்செய்கை யோத்துக்களுள்) புணர்தற்குரிய கருவியின் இயல்பு கூறினமையின் புணரியல் எனப்பட்டது. மேல் மொழிமரபிற் கூறிய மொழிகள் புணருமாறு உணர்த்தினமையின் மொழிமரபினோடு இயைபுடைத் தாயிற்று.

**௱௪. மூன்றுதலை யிட்ட முப்பதிற் றெழுத்தின்**
**இரண்டுதலை யிட்ட முதலா கிருபஃ**
**தறுநான் கீறொடு நெறிநின் றியலும்**
**எல்லா மொழிக்கு மிறுதியு முதலும்**
**மெய்யே யுயிரென் றாயீ ரியல.**

இத்தலைச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், மொழிமரபினுள் முதலும் ஈறும் கூறியவழி உயிரும் மெய்யும் உயிர்மெய்யும் என மூன்றாய் விரிந்துநின்றதனை உயிரும் மெய்யும் என இரண்டாகத் தொகுத்தலானும், அவ்வழி இருபத்திரண்டு எழுத்து மொழிக்கு முதல், இருபத்துநான்கு எழுத்து மொழிக்கு ஈறு எனக்கூறலின், முப்பத்து மூன்று எனப்பட்ட எழுத்து நாற்பத்தாறு ஆவனபோல விரிந்ததனை அவையெல்லாம் முப்பத்து மூன்றினுள்ளனவே எனத் தொகுத்தலானும் விரிந்தது தொகுத்தல் நுதலிற்று.

இ-ள் :—மூன்று தலை இட்ட முப்பதிற்று எழுத்தின்-மூன்றனை முடிவிலேயிடப்பட்ட முப்பதாகிய எழுத்தினுள், இரண்டு தலை இட்ட முதல் ஆகு இருபஃது-அவ்விரண்டினை முடிவிலே யிடப்பட்ட மொழிக்கு முதலாய இருபதும், அறு நான்கு ஈறொடு நெறி நின்று இயலும்-இருபத்துநான்கு ஈற்றொடு வழக்குநெறிக்கண் நின்றுநடக்கும், எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும்-மூவகை மொழிக்கும் ஈறும் முதலுமாவன, மெய் உயிர் என்று அ ஈர் இயல-மெய்யும் உயிருமாகிய அவ்விரண்டு இயல்பினையுடைய.

உ-ம். மரம், இலை, ஆல், விள என மெய்யும் உயிரும், முதலும் ஈறும் ஆயின.

இருபத்திரண்டு எழுத்து முதலாவன பன்னிரண்டு உயிரும் ஒன்பது உயிர்மெய்யும் மொழிமுதற் குற்றியலுகரமும் என இவை. இருபத்து நான்கு எழுத்து ஈறாவன பன்னிரண்டு உயிரும் பதினொரு புள்ளியும் ஈற்றுக்குற்றிய லுகரமும் என இவை. 'ஈற்றொடு' என்பது ['ஈறொடு' என] விகாரத்தாற்றொக்கது மெய் முற் கூறியவதனால், *நால்வகைப்புணர்ச்சியும் மெய்க்கண் நிகழுமாறு உயிர்க்கண் நிகழா தென்பது கொள்க. ['என்று' என்பது எண்ணிடைச்சொல்.] (௧)

**௱௫. அவற்றுள்**
**மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்.**

இது, (மேற்கூறியவாற்றான் தனிமெய்யும் முதலாவான் சென்றதனை விலக்கலின்,) எய்தியது விலக்கல் நுதலிற்று.

இ-ள் :—அவற்றுள்-மேல் மெய்யும் உயிரும் என்று கூறிய இரண்டினுள், ஈறு மெய்யெல்லாம் புள்ளியொடு நிலையல்-மொழிக்கு ஈறாய மெய்யெல்லாம் புள்ளி பெறுதலொடு நிற்க. முதலாயவையெல்லாம் புள்ளியிழந்து நிற்க என்றவாறு.

உ-ம். மரம் எனவரும்.

மொழிமுதன் மெய் புள்ளியொடு நில்லா தென்றது, ஈறெல்லாம் புள்ளியொடு நிலையல் என ஈற்றின்மேல் வைத்துக் கூறிய வதனான், அவ்வீற்றின் மெய் உயிர் முதன்மொழி வந்த இடத்து அஃது ஏற இடம் கொடுக்கு மென்பது பெறப் பட்டது. (உ)

## ௱௬. குற்றிய லுகரமு மற்றென மொழிப.

இஃது, ஈற்றிற் குற்றியலுகரத்திற்கு ஓர் கருவி கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—குற்றியலுகரமும் அற்று என மொழிப-ஈற்றிற்குற்றியலுகரமும் (புள்ளியீறுபோல உயிரேற இடம்கொடுக்கும்) அத்தன்மைத்து என்று சொல்லுவர்.

இம்மாட்டேறு ஒருபுடைச்சேறல் எனவுணர்க. (௩)

## ௱௭. உயிர்மெய் யீறு முயிரீற் றியற்றே.

இது, மேல் "மெய்யே யுயிரென் றாயீ ரியல" [புணரியல்-க] என்றதற்கு ஓர் புறநடை கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—உயிர்மெய் ஈறும் உயிர் ஈற்று இயற்று-உயிர்மெய் மொழியீற்றில் நின்றதுவும் உயிரீற்றின் இயல்பையுடைத்து. இடையில் நின்றதுவும் உயிரின் இயல்பையுடைத்து.

ஈறும் இடையும் உயிருள் அடங்குமெனவே, முதல் மெய்யுள் அடங்கும் என்ப தாயிற்று.

இதனால், விள முதலிய உயிர்மெய் ஈறெல்லாம் அகரவீறு முதலிய உயிரீற்றுள் அடங்கிப் புணர்ச்சிபெறுவன வாயின. வரகு என்புழி இடை நின்ற ரகரஉயிர்மெய் அகரமாய் உயிர்த்தொடர்மொழி யெனப்பட்டது.

ஈண்டு உயிர்மெய் ஒற்றுமை நயத்தான் உயிர்மெய்யென வேறு ஓர் எழுத்தாகாது அன்றி, ஈறும் இடையும் உயிரென ஓரெழுத்தாயும், முதல் மெய்யென ஓரெழுத் தாயும் நின்றதாயிற்று.

இத்துணையும் ஒருமொழி யிலக்கணங் கூறலின் மொழிமரபின் ஒழிபாயிற்று.(௪)

௱௮ உயிரிறு சொன்மு னுயிர்வரு வழியும்
உயிரிறு சொன்முன் மெய்வரு வழியும்
மெய்யிறு சொன்மு னுயிர்வரு வழியும்
மெய்யிறு சொன்முன் மெய்வரு வழியுமென்
றிவ்வென வறியக் கிளக்குங் காலை
நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவியென்
றாயீ ரியல புணர்நிலைச் சுட்டே.

இது, மேற்கூறும் புணர்ச்சி மும்மொழிப்புணர்ச்சியாகாது, இருமொழிப்புணர்ச்சியாமென்பதூஉம், அவை எழுத்துவகையான் நான்கா மென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—உயிர் இறு சொல் முன் உயிர் வரு வழியும்-உயிரீற்றுச் சொல்முன் உயிர்முதல் மொழி வரும் இடமும், உயிர் இறு சொல்முன் மெய் வரு வழியும்-உயிரீற்றுச்சொல்முன் மெய்முதல் மொழி வரும் இடமும், மெய் இறு சொல்முன் உயிர் வரு வழியும்-மெய்யீற்றுச் சொல்முன் உயிர்முதல் மொழி வரும் இடமும், மெய் இறு சொல்முன் மெய் வரு வழியும்-மெய்யீற்றுச்சொல்முன் மெய்முதல் மொழி வரும் இடமும், இவ் என அறிய-(அப்புணர்ச்சிவகை) இவையென அறிய, கிளக்கும் காலை-ஆசிரியர் சொல்லுங்காலத்து, நிறுத்த சொல் குறித்துவரு கிளவி என்று அ ஈர் இயல-அவை நிறுத்த சொல்லும் அதன்பொருண்மையைக் குறித்துவரும் சொல்லுமாகிய அவ்விரண்டு இயல்பையுடைய, புணர்நிலைச் சுட்டு-புணரும் நிலைமைக்கண்.

ஆ ஈ, ஆ வலிது, ஆல் இலை, ஆல் வீழ்ந்தது எனக் கண்டுகொள்க.

விளவினைக் குறைத்தான் என்பது அவ்வுருபுகுறித்து வருகிளவியை நிலைமொழியுள் அடக்கி இருமொழிப்புணர்ச்சியாய் நின்றவாறு அறிக.

[அவ்வுருபு-'விளவினை' என்பதன் ஐ உருபு. முதல் ஏகாரம் பிரிநிலை. இரண்டாம் ஏகாரம் ஈற்றசை. 'என்று' இரண்டும் எண்ணிடைச்சொல்.] (௫)

௱௯. அவற்றுள்
நிறுத்த சொல்லி னீறா கெழுத்தொடு
குறித்துவரு கிளவி முதலெழுத் தியையப்
பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும்
பெயரொடு தொழிலைப் புணர்க்குங் காலுந்
தொழிலொடு பெயரைப் புணர்க்குங் காலுந்
தொழிலொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
மூன்றே திரிபிட னொன்றே யியல்பென
ஆங்கந் நான்கே மொழிபுண ரியல்பே.

இது, மேற்கூறும் புணர்ச்சி புணர்ச்சிவகையான் நான்காமென்பதூஉம், சொல் வகையான் நான்காமென்பதூஉம், புணர்வது சொல்லும் சொல்லுமேயன்றி, எழுத்தும் எழுத்துமே யென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அவற்றுள்-நிலைமொழி வருமொழி யெனப்பட்டவற்றுள், நிறுத்த சொல்லின் ஈறு ஆகு எழுத்தொடு குறித்து வரு கிளவி முதல் எழுத்து இயைய-நிறுத்த சொல்லினது ஈறாகின்ற எழுத்தினோடு அதனைக்குறித்து வருகின்ற சொல்லினது முதலெழுத்துப் பொருந்த, பெயரொடு பெயரை புணர்க்கும் காலும்-பெயர்ச்சொல்லொடு பெயர்ச்சொல்லைப் புணர்க்கும் காலத்தும், பெயரொடு தொழிலை புணர்க்கும் காலும்-பெயர்ச்சொல்லொடு வினைச்சொல்லைப் புணர்க்கும் காலத்தும், தொழிலொடு பெயரை புணர்க்கும் காலும்-வினைச்சொல்லொடு பெயர்ச்சொல்லைப் புணர்க்குங்காலத்தும், தொழிலொடு தொழிலை புணர்க்கும் காலும்-வினைச்சொல்லொடு வினைச்சொல்லைப் புணர்க்கும் காலத்தும், திரிபு மூன்று இயல்பு ஒன்று என அ நான்கே மொழிபுணர் இயல்பு-திரியும் இடம் மூன்றும் இயல்பு ஒன்றும் ஆகிய அந் நான்கே மொழிகள் தம்மிற் புணரும் இயல்பு.

உ-ம். சாத்தன் கை, சாத்தன் உண்டான், வந்தான் சாத்தன், வந்தான் போயினான் எனக்கண்டுகொள்க.

இடையும் உரியும் பெயர் வினைகளை அடைந்தல்லது தாமாக நில்லாமையின், பெயர் வினைகட்கே புணர்ச்சி கூறப்பட்டது.

[இடை-இடைச்சொல். உரி-உரிச்சொல். 'ஆங்கு' என்பது அசை. முதல் மூன்று ஏகாரமும் தேற்றப்பொருளில் வந்தன. நான்காம் ஏகாரம் ஈற்றசை.] (௯)

௱௰. **அவைதாம்**
**மெய்பிறி தாதன் மிகுதல் குன்றலென்**
**றிவ்வென மொழிப திரியு மாறே.**

இது, மேற்கூறிய திரிபுமூன்றும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அவைதாம்-அத்திரிபுதான், மெய்பிறிதுஆதல் மிகுதல் குன்றல் என்று இவ் என மொழிப திரியும் ஆறு-மெய்பிறிதாதலும் மிகுதலும் குன்றலுமாகிய இவை எனச் சொல்லுவர் திரியும் நெறியினை. இம்மூன்றும் அல்லாதது இயல்பென்று கொள்க.

உ-ம். பொற்குடம், யானைக்கோடு, மரவேர் எனவரும்.

குவளைமலர் என்பது இயல்பு.

இப்புணர்ச்சிநான்கும் ஒருபுணர்ச்சிக்கண்ணே நிகழ்வு பெறுமென்பது உரையிற்கொள்க. மேல் 'இடம்' [புணரியல்-௬] என்றதனால், ஒருபுணர்ச்சிக்குத் திரிபு மூன்றனுள் ஒன்றாயினும் இரண்டாயினும் மூன்றாயினும் வரப்பெறும் எனக்கொள்க.

'மகத்தாற் கொண்டான்' என்பது அ~~ம்மிகுதி இரண்டுவந்தது~~. 'நீயிர் குறியிர்' என்பது அ~~ம்மிகுதி மூன்று~~வந்தது. பிறவும் அன்ன. [முதல் உதாரணத்தில் 'அத்திரிபு மூன்று வந்தது' என்றிருத்தல் வேண்டும். இரண்டாம் உதாரணமே பிழை. இப்பிழைகள் ஏடுபெயர்த்தெழுதினோரால் நேர்ந்தன போலும். 'என்று' எண்ணிடைச்சொல்.]

௱௧௧. **நிறுத்த சொல்லுங் குறித்துவரு கிளவியும்**
**அடையொடு தோன்றினும் புணர்நிலைக் குரிய.**

இது, "நிறுத்தசொல்லே குறித்துவருகிளவி" [புணரியல்-௫] என்பதற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—நிறுத்த சொல்லும் குறித்து வரு கிளவியும்-நிலைமொழியாக நிறுத்தின சொல்லும் அதனைக்குறித்து வரு சொல்லும், அடையொடு தோன்றினும் புணர்நிலைக்கு உரிய-(தாமேவந்து புணர்வதன்றி,) அவையிரண்டினும் ஓரோர் சொல்லடைவந்து ஒன்றித்தோன்றினும் புணர்நிலைக்கு உரிய.

உ-ம். பதினாயிரத்தொன்று, ஆயிரத்தொருபஃது, பதினாயிரத்தொருபஃது எனவரும்.

ஈண்டு அடையென்றது உம்மைத் தொகையினையும், இருபெயரொட்டுப் பண்புத்தொகையினையும் எனவுணர்க. அவையல்லாத தொகைகளுள் வினைத்தொகையும், பண்புத்தொகையும் பிளந்து முடியாமையின் ஒருசொல் எனப்படும். அன்மொழித்தொகையும் தனக்கு வேறு ஓர் முடிபு இன்மையின் ஒரு சொல் எனப்படும். இனி, ஒழிந்த வேற்றுமைத்தொகையும் உவமைத்தொகையும் "தன்னினமுடித்தல்" என்றதனான் ஈண்டு ஒருசொல் எனப்படும்.

உண்டசாத்தன் வந்தான், உண்டுவந்தான் சாத்தன் என்பனவும் அவ்வாறே ஒருசொல் எனப்படும். பிறவும் அன்ன. (௮)

ாகஉ. மருவின் றொகுதி மயங்கியன் மொழியும்
உரியவை யுளவே புணர்நிலைச் சுட்டே.

இஃது, இலக்கணவழக்கேயன்றி மரூஉக்களும் புணர்க்கப்படும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—மருவின் தொகுதி மயங்கு இயல் மொழியும்-(இலக்கணவழக்கேயன்றி) மரூஉத்திரளாகிய நிலைதமொருக மயங்கின இயல்பையுடைய இலக்கணத்தொடு பொருந்தின மரூஉவழக்கும், உரியவை உள புணர் நிலைச் சுட்டு-உரியன உள புணரும் நிலைமைக்கண்.

உ-ம். மீகண், முன்றில் எனவரும்.

'நிலை' என்றதனான், இலக்கணத்தொடு பொருந்திய மரூஉவழக்கல்லா மரூஉவழக்கும் புணர்க்கப்படும் எனக்கொள்க. (க)

ாகங. வேற்றுமை குறித்த புணர்மொழி நிலையும்
வேற்றுமை யல்வழிப் புணர்மொழி நிலையும்
எழுத்தே சாரியை யாயிரு பண்பின்
ஒழுக்கல் வலிய புணருங் காலை.

இது, நால்வகைப்புணர்சியுள், மிக்குப்புணர்சி இத்தன்மைத் தென்பதூஉம், அந்நால்வகைப்புணர்சியும் வேறு ஓர் ஆற்றான் இருவகைய மென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—வேற்றுமை குறித்த புணர் மொழி நிலையும்-வேற்றுமையது பொருண்மையினைக் குறித்த புணர் மொழியது நிலைமையும், வேற்றுமை அல்வழி புணர் மொழி நிலையும்-வேற்றுமையல்லாத அல்வழியிடத்துப் புணர் மொழியது நிலைமையும், எழுத்து சாரியை அ இரு பண்பின் ஒழுக்கல் வலிய-(மிகக புணர்சிக்கண்) எழுத்துமிகுதலும் சாரியைமிகுதலு மாகிய அவ்விரண்டு இலக்கணத்தானும் நடாத்துதலைத் தமக்கு வலியாகவுடைய, புணரும்காலை-அவைபுணருங்காலத்து.

விளங்கோடு, மகவின்கை, விளக்குறிது, புனையின்குறை எனக்கண்டுகொள்க.

'ஒழுக்கல்வலிய' என்றதனான்,எழுத்தும் சாரியையும் உடன்பெறுதல் கொள்க.

அவற்றுக்கோடு, கலத்துக்குறை எனவரும்.

அல்வழி முற்கூறாதது, வேற்றுமையல்லாதது அல்வழியென வேண்டலின் என்பது. முன்னே 'புணர்மொழி' என்று வைத்து, 'புணருங்காலை' என்றதனாற் புணர்ச்சிக்கண்ணே வேற்றுமை அல்வழி என இரண்டாவது; அல்லாக்கால், வேற்றுமையெனவே படுமென்பது கொள்க. ஈண்டு அல்வழி யென்றது பெரும்பான்மையும் எழுவாயினை. (ம)

ாகச. ஐஒடு குஇன் அதுகண் ணென்னும்
அவ்வா றென்ப வேற்றுமை யுருபே.

இது, மேல் வேற்றுமை யென்னப்பட்ட அவற்றது பெயரும், முறையும், தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ஐ ஒடு கு இன் அது கண் என்னும்-ஐ ஒடு கு இன் அது கண் என்று சொல்லப்படும், அ ஆறு என்ப வேற்றுமை உருபு-அவ்வாறும் என்று சொல்லுவர் வேற்றுமை யுருபுகளை.

இவ்வாறும் அல்லன வெல்லாம் அல்வழி எனப்படும். அவை எழுவாயும், விளியும், உவமத்தொகையும், உம்மைத்தொகையும், பண்புத்தொகையும், இருபெய ரொட்டுப் பண்புத்தொகையும், முற்றும், இருவகை எச்சமும், இடையும், உரியும் என இவை. (கக)

### ௱கஉ. வல்லெழுத்து முதலிய வேற்றுமை யுருபிற் கொல்வழி யொற்றிடை மிகுதல் வேண்டும்.

இது, நான்காவதற்கும் ஏழாவதற்கும் உருபியலை நோக்கிற்றோர் கருவி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—வல்லெழுத்து முதலிய வேற்றுமை உருபிற்கு-வல்லெழுத்து முதலாகவுடைய வேற்றுமை யுருபிற்கு, ஒல்வழி ஒற்று இடை மிகுதல் வேண்டும்-பொருந்தினஇடத்து வல்லொற்றாயினும் மெல்லொற்றாயினும் இடைக்கண் மிகுதல் வேண்டும்.

சூ. 321

ஊர்க்கு, நீர்க்கு, ஊர்க்கண், நீர்க்கண் என வல்லெழுத்து மிக்கன. தங்கண், எங்கண் என மெல்லெழுத்து மிக்கன.

'ஒல்வழி' என்றதனால், அரசர்கண், பார்ப்பார்கண் என ஒற்று மிகாதனவும் கொள்க. "மெய்பிறிதாதல்" [புணரியல்-எ] முதலாய நான்கு புணர்ச்சியும் உருபு புணர்ச்சிக்கண்ணும் எய்தலின், மெய்பிறிதாதலை எடுத்தோதாது மிக்கதனை எடுத்தோதிய வதனான், மிக்க புணர்ச்சி யல்லனவும் ஈண்டே கொள்க. பொற்கு, பொற்கண், ஆங்கண், ஈங்கண், ஊங்கண்; அவற்கு, இவற்கு; நுங்கண்; கொற்றற்கு, சாத்தற்கு எனவரும்.

அவன்கண், சாத்தன்கண் என்புழி இயல்பும் இதனானே கொள்க. (கஉ)

### ௱கங. ஆறனுருபி னகரக் கிளவி ஈறு ககரமுனைக் கெடுதல் வேண்டும்.

இஃது, ஆறுவதற்குத் தொகைமரபினை நோக்கியதோர் கருவி கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—ஆறன் உருபின் அகரக்கிளவி-ஆறும் வேற்றுமையாகிய அது என்னும் சொல்லிடத்து அகரமாகிய எழுத்து, ஈறு ஆகு அகரமுனை கெடுதல் வேண்டும்-(நெடுமுதல் குறுகும்) மொழியீற்று உளதாகின்ற அகரத்தின்முன்னர்த் தான் கெடுதல் வேண்டும்.

உ-ம். நமது, எமது, தனது, எனது, நினது எனவரும். சூ. 161

மேல் ஈறாகு அகரம் இதற்குத் தாராது, இவ்வுருபகரமே ஏறி முடிய அமைதலின், அது கேடாதல் வேண்டா எனின், நெடுமுதல் குறுகி விகாரப்பட்டு நின்ற மொழியாகலின் அதன்மேல் உருபகரமேறி முடியல் வேண்டாராயினர் போலு மென்பது.

### ௱கச. வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே.

இது, வேற்றுமையுருபு பெயர்க்கண் நிற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—வேற்றுமை பெயர் வழிய புணர் நிலை-வேற்றுமை பெயர்களின் பின்னிடத்தன அவற்றோடு புணரும் நிலைமைக்கண்.

சாத்தனை, சாத்தனொடு எனவரும்.

மேல் "உருபுநிலை திரியா தீறுபெயர்க் காகும்" [வேற்றுமையியல்-அ] என்கின்றானன்றே வெனின், பெயரொடு பெயர் முதலிய நால்வகைப் புணர்ச்சியையும் வேற்றுமை அல்வழியென இரண்டாக அடக்கலின், வினைவழியும் உருபு வருமென்பதுபட நின்றதாகலின் ஈண்டு இது கூறப்பட்டது. [வேற்றுமை-வேற்றுமையுருபுகள். ஏகாரம் ஈற்றசை.] (கச)

**௱கரு. உயர்திணைப் பெயரே யஃறிணைப் பெயரென்**
**றாயிரண் டென்ப பெயர்நிலைச் சுட்டே.**

இது, வேற்றுமையொடு புணரும் பெயர்கட்குப் பெயரும், முறையும், தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—உயர்திணைப்பெயரே அஃறிணைப்பெயர் என்று ஆ இரண்டு என்ப-உயர்திணைப்பெயரும் அஃறிணைப்பெயருமாகிய அவ்விரண்டு மென்று சொல்லுப, பெயர் நிலை சுட்டு-பெயராகிய நிலைமையது கருத்தினை.

ஆடூஉ, மகடூஉ என்பன உயர்திணைப்பெயர். ஒன்று பல என்பன அஃறிணைப் பெயர்.

மற்று விரவுப்பெயர் கூறாராயது என்னை யெனின், மற்றது சாத்தன் வந்தான், வந்தது எனப் புணர்ச்சிக்கண் பெரும்பான்மையும் ஒருதிணைப்பாற் படுதலின், அவ்விரண்டாக அடக்கிக் கூறினா ரென்பது.

[ஏ, என்று என்பன எண்ணிடைச்சொல் இரண்டாம் ஏகாரம் ஈற்றசை.] (கரு)

**௱கசு. அவற்றுவழி மருங்கிற் சாரியை வருமே.**

இது, சாரியை வரும் இடம் கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—அவற்றுவழிமருங்கின் சாரியை வரும்-அப்பெயர்களின் பின்னாகிய இடத்தின்கண்ணே சாரியை வரும்.

ஆடூஉவின் கை, பலவற்றுக் கோடு எனவரும். ['அவற்றுள்வழி' எனவும்பாடம்.]

**௱உ௰. அவைதாம்**
**இன்னே வற்றே யத்தே யம்மே**
**ஒன்னே யானே யக்கே யிக்கே**
**அன்னென் கிளவி யுளப்படப் பிறவும்**
**அன்ன வென்ப சாரியை மொழியே.**

இது, சாரியைகட்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அவைதாம்-மேற் சாரியை யென்னப்பட்டவைதாம், இன்னே வற்றே அத்தே அம்மே ஒன்னே ஆனே அக்கே இக்கே அன் என் கிளவி உளப்பட பிறவும்-இன்னும் வற்றும் அத்தும் அம்மும் ஒன்னும் ஆனும் அக்கும் இக்கும் அன் என்னும் சொல்லுமாகிய அவ்வொன்பதும் உளப்படப் பிறவும், அன்ன என்ப சாரியை மொழி-அச்சாரியையாம் தன்மைய என்று சொல்லுவர் சாரியையாகிய மொழிகளை.

'பிறவும்' என்றதனால், தம், நம், நும், எம், கெழு, ஏ, ஐ, ஞான்று என்பனவுங் கொள்க. "எடுத்த நறவின் குலையலங் காந்தள்" என்புழி 'அலம்' என்பதோர் சாரியையும் உண்டா லெனின், அதனை 'அலங்கு காந்தள்' என்பதன் விகாரமென்ப. இன்சாரியை வழக்குப் பயிற்சியானும் நூலுட் பலகாலும் எடுத்தோதப்படலானும், வாளா ஓதியவழி தானே சேறலானும் முன்வைக்கப்பட்டது. அன்சாரியையும் அதுபோலச் சிறப்புடைமையின் பின் வைக்கப்பட்டது. இடை நின்றவற்றியல்பும் அறிந்து கொள்க. [முதல் எட்டு ஏகாரமும் எண்ணிடைச்சொல். ஒன்பதாம் ஏகாரம் ஈற்றசை.] (கஎ)

**ஙஉக. அவற்றுள்**
**இன்னி னிகர மாவி னிறுதி**
**முன்னர்க் கெடுத லுரித்து மாகும்.**

இஃது, அவற்றுள் இன்சாரியை முதல் திரியுமாறு கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—அவற்றுள்-மேற்கூறப்பட்ட சாரியைகளுள், இன்னின் இகரம்-இன்னின் இகரம், ஆவின் இறுதிமுன்னர்-இன்சாரியையினது இகரம் ஆ என்னும் சொல்லீற்றுமுன்னர், கெடுதலும் உரித்தாகும்-கெடாமையேயன்றிக் கெடுதலும் உரித்தாம்.

உ-ம். ஆனை, ஆவினை, ஆன்கோடு, ஆவின்கோடு எனவரும்.

'முன்னர்' என்றதனான், 'மா' என்னும் சொல்லின்முன்னும் அவ்விரு விதியும் எய்தும். மானை, மாவினை, மான்கோடு, மாவின்கோடு எனவரும். (கஅ)

**ஙஉஉ. அளபாகு மொழிமுத னிலைஇய வுயிர்மிசை**
**னஃகான் றஃகா னாகிய நிலைத்தே.**

இஃது, இன்னிறுதி திரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அளபாகும் மொழி முதல்-அளபுப்பெயராகும் மொழியின் முதற்கண், நிலைஇய உயிர்மிசை னஃகான்-நிலைபெற்ற உயிர்க்குமேலாய்நின்ற இன் சாரியையது னகாரம், றஃகான் ஆகிய நிலைத்து-றகாரமாகிய நிலைமைத்து.

பதிற்றகல், பதிற்றுழக்கு என்புழி அவ்வாறு வருதல் அறிக.

'நிலைத்து' என்றதனால், பிறவழியும் இன்னின் னகரம் றகரமாதல் கொள்க. பதிற்றொன்று, பதிற்றேழு எனவரும். (கக)

**ஙஉங. வஃகான் மெய்கெடச் சுட்டுமுத லைம்முன்**
**அஃகா னிற்ற லாகிய பண்பே.**

இது, வற்று முதல் திரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—சுட்டு முதல் ஐமுன்-சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஐகார வீற்றுச் சொல்முன்னர், வஃகான் மெய் கெட அஃகான் நிற்றல் ஆகிய பண்பு-வற்றுச் சாரியை தன் வகரமாகியமெய் கெட அகரம் நிற்றலாகிய பண்பினையுடைய.

அவையற்றை, இவையற்றை, உவையற்றை எனவும், அவையற்றுக்கோடு எனவும் வரும்.

'ஆகிய பண்பு' என்றதனால், சுட்டு முதலாகிய ஐ என் இறுதி ஐகாரத்தோடு நில்லாதவழி, வற்றின் வகரம் அகரம் நிற்கக் கெடாது வற்றாயே நிற்றல் கொள்க. மற்றிது, "திரிந்ததன்றிரிபு பிறிது" என்னும் நயத்தாற் கெடாதே நிற்குமாகலின்,

இது கூறவேண்டா எனின், சுட்டு முதல் ஐ ஈற்றுச் சொல்லின் ஐமுன் என ஓதாது, 'சுட்டு முதல் ஐம்முன்' என அச்சொல்முன் எல்லாம் கெடுவதுபோல ஓதி னமையின், வேண்டிற்றென்பது.

**௱௨௪. னஃகான் றஃகா னான்க னுருபிற்கு.**

இது, னகரவீற்றுச் சாரியை நான்கற்கும் ஈறு திரிபு கூறுதல் நுதலிற்று.

இ-ள் :—நான்கன் உருபிற்கு னஃகான் றஃகான்-நான்காம்; உருபிற்கு (னகார வீற்றுச் சாரியையெல்லாம்) னகாரம் றகாரமாம்.

உ-ம். விளவிற்கு, கோஒற்கு, ஒருபாற்கு, அதற்கு எனவரும். (௨௧)

**௱௨௫. ஆனி னகரமு மதனோ ரற்றே**
**நாண்முன் வரூஉம் வன்முதற் றொழிற்கே.**

இஃது, ஆன்சாரியை பொருட்புணர்ச்சிக்கண் ஈறு திரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—நாள்முன் வரும் வல்முதல் தொழிற்கு ஆனின் அகரமும்-நாட்பெயர் முன்னர் வரும் வல்லெழுத்தை முதலாகவுடைய வினைசொற்கண்வரும் ஆன்சாரி யையின் அகரமும், அதன் ஓர் அற்று-அந்நான்கனுருபின்கண் வரும் ஆன்சாரியை யோடு ஒரு தன்மைத்தாய் னகாரம் றகாரமாம்.

'தொழிற்கு' என்பதனைத் 'தொழிற்கண்' என மயக்கமாகக் கொள்க.

உ-ம். பரணியாற் கொண்டான் எனவரும்.

உம்மையை இரட்டுற மொழிதலானே எதிரது தழீஇய தாக்கி, அதனான் நாளல்வைற்றுமுன் வரும் வன்முதற் றொழிற்கண் இன்னின் னகரமும் றகாரமா ய்த் திரிதல் கொள்க. பனியிற் கொண்டான் எனவரும்.

தொழிற்கண் இன்னின் னகரம் திரியுமெனவே, பெயர்க்கண் இன்னின் னகரம் திரிதலும் திரியாமையுமுடைய வென்பது ஞாபகத்தாற் கொள்ளப்படும். பறம்பிற் பாரி, (புதான்) வண்டின் கால் எனவரும். (௨௨)

**௱௨௬. அத்தி னகர மகரமுனை யில்லை.**

இஃது, அத்து முதல் திரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அத்தின் அகரம் அகரமுனை இல்லை-அத்துச்சாரியையின் அகரம் அகரவீற்றுச்சொல்முன்னர் இல்லையாகும்.

உ-ம். மகத்துக்கை எனவரும். (௨௩)

**௱௨௭. இக்கி னிகர மிகரமுனை யற்றே.**

இஃது, இக்குச்சாரியை முதல் திரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—இக்கின் இகரம் இகரமுனை அற்று-இக்குச்சாரியையினது இகரம் இகரவீற்றுச்சொல்முன்னர் மேற்கூறியவாறுபோலக் கெடும்.

உ-ம். ஆடிக்குக் கொண்டான் எனவரும். (௨௪)

**௱உ௪. ஐயின் முன்னரு மவ்விய னிலையும்.**

இதுவும் அது.

இ-ள் :—ஐயின் முன்னரும் அ இயல் நிலையும்-(இக்கின் இகரம்) இகரவீற்றுச் சொல்முன்னன்றி ஐகாரவீற்றுச்சொல்முன்னரும் மேற்கூறப்பட்ட கெடுதலியல் பிலே நிற்கும்.

உ-ம். சித்திரைக்குக் கொண்டான் எனவரும். (உ௪)

**௱உ௫. எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி**
**அக்கி னிறுதிமெய் மிசையொடுங் கெடுமே**
**குற்றிய லுகர முற்றத்தோன் றாது.**

இஃது, அக்கீறு திரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—எ பெயர்முன்னரும் வல்லெழுத்து வரு வழி அக்கின் இறுதிக் குற்றியலுகரம் முற்ற தோன்றாது-எவ்வகைப்பட்ட பெயர்முன்னும் வல்லெழுத்து வருமிடத்து அக்கின் இறுதிக் குற்றியலுகரம் முடியத் தோன்றாது, மெய் மிசை யொடும் கெடும்-அதனாற் பற்றப்பட்ட வல்லெழுத்தாகிய மெய் தனக்கு மேல்நின்ற மெய்யோடும் கெடும்.

உ-ம். குன்றக்கூகை, மன்றப்பெண்ணை, ஈமக்குடம், அரசக்கன்னி, தமிழக் கூத்து, எனவரும்.

['முற்ற' என்றதனால் வன்கணமன்றி மற்றக் கணங்கட்கும் கொள்க.] தமிழ நூல், தமிழயாப்பு, தமிழவரையர் எனவரும். (உ௫)

**௱உ௬. அம்மி னிறுதி கசதக் காலைத்**
**தன்மெய் திரிந்து ஙஞந வாகும்.**

இஃது, அம் மின் இறுதி திரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அம்மின் இறுதி கசத காலை-அம்மின் இறுதியாகிய மகரவொற்று கசத க்கள் வருமொழியாக வந்தகாலத்து, தன் மெய் திரிந்து ங ஞ ந ஆகும்-தன் வடிவு திரிந்து ங ஞ ந க் களாம்.

உ-ம். புளியங்கோடு, புளியஞ்செதிள், புளியந்தோல் எனவரும்.

தன்மெய் என்றதனால், அம்மின் இறுதி மகரமேயன்றி, தம் நம் நும் உம் என்பனவற்றின் இறுதி மகரமும் திரியுமென்பது கொள்க.

எல்லார்தங்கையும், எல்லார்நங்கையும், எல்லார்நுங்கையும், "வானவரி வில்லுந் திங்களும்" எனவரும். (உ௬)

**௱உ௭. மென்மையு மிடைமையும் வரூஉங் காலை**
**இன்மை வேண்டு மென்மனார் புலவர்.**

இதுவும் அது.

இ-ள் :—மென்மையும் இடைமையும் வரும் காலை-அம்மின் இறுதி மென்மை யும் இடைமையும் வருமொழியாய் வருங்காலத்து, இன்மை வேண்டும்-என்மனார் புலவர்-இன்றிமுடிதலை வேண்டும் என்றுசொல்லுவர் புலவர்.

உ-ம். புளிய ஞெரி, நுனி, முரி, யாழ், வட்டு எனவரும்.

உரையிற்கோட லென்பதனால், புளிய விலை எனவும் உயிர் வருவழிக் கேடும் கொள்க. (உ௭)

**௱௩௨. இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்**
**கின்னென் சாரியை யின்மை வேண்டும்.**

இஃது, இன் சாரியை முழுவதூஉம் கெடும் இடம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—இன் என வரும் வேற்றுமை உருபிற்கு-இன் என்றுசொல்ல வருகின்ற வேற்றுமையுருபிற்கு, இன் என் சாரியை இன்மை வேண்டும்-இன் என்னும் சாரியை தான் இன்றி முடிதல் வேண்டும்.

உ-ம். விளவின், பலாவின் எனவரும்.

“அவற்றுள் இன்னின் இகரம்” [புணரியல்-௧௮] என்றதன்பின் வையாததனால், சிறுபான்மை இன் சாரியை கெடாதுநிற்றல் கொள்க. பாம்பினிற் கடிது தேள் எனவரும். (உ௯)

**௱௩௩. பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப**
**வேற்றுமை யுருபு நிலைபெறு வழியும்**
**தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்**
**ஒட்டுதற் கொழுகிய வழக்கொடு சிவணிச்**
**சொற்சிதர் மருங்கின் வழிவந்து விளங்கா**
**திடைநின் றியலுஞ் சாரியை யியற்கை**
**உடைமையு மின்மையு மொடுவயி னொக்கும்.**

இது, சாரியைகட்கெல்லாம் பொதுவாயதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—பெயரும் தொழிலும் பிரிந்து ஒருங்கு இசைப்ப-பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் பெயரும் வினையுமாய்ப் பிரிந்தும் பெயரும் பெயருமாய்க் கூடியும் இசைப்ப, வேற்றுமை உருபு நிலை பெறு வழியும்-வேற்றுமையுருபு தொகாது நிலை பெற்ற இடத்தினும், தோற்றம் வேண்டா தொகுதிக்கண்ணும்-அவை தோற்றுதல் வேண்டாத தொகுதிக்கண்ணும், ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கொடு சிவணி-தாம்தாம் பொருந்துதற்கேற்ப நடந்த வழக்கோடு பொருந்தி, சொல் சிதர்மருங்கின்-சாரியை பெறும் புணர்மொழிகளைப் பிரித்துக்காணுமிடத்து, வழி வந்து விளங்காது இடை நின்று இயலும்-அவற்றின்பின் வந்து விளங்காது அவற்றிடையே நின்று நடக்கும், சாரியை இயற்கை-சாரியையின்இயல்பு.உடைமையும் இன்மையும் ஒடுவயின்ஒக்கும்-அவைதாம் உண்டாதலும் இல்லையாதலும் ஒடு உருபினிடத்து ஒக்கும்.

உ-ம். விளவினைக்குறைத்தான், விளவினைக்குறைத்தவன் எனவும், நிலாத்துக் கொண்டான், நிலாத்துக்கொண்டவன் எனவும் வரும்.

ஒட்டுதற்கொழுகிய வழக்கன்மையின், நிலாக்கதிர் நிலாமுற்றம் என்பன சாரியை பெறாவாயின.

எல்லாநம்மையும் எனச் சாரியை ஈற்றின்கண்ணும் வருதலின், இடைநின்றியறல் பெரும்பான்மை யெனக்கொள்க.

டும் - ஆய்தப்புள்ளி (முன்பு போலக் கெடாது) நிலைபெற்று முடிதல் வேண்டும், அல்வழியான் - அல்வழியின்கண்.

உ-ம்:—அஃதடை, இஃதடை, உஃதடை; ஆடை, இலை என ஒட்டுக.

'முன்' என்றதனான், வேற்றுமைக்கண்ணும் உயிர் முதல் மொழி வந்த இடத்து அஃதடைப்பு, அஃதாட்டம் என ஆய்தம் கெடாமை கொள்க.

['ஆன்' என்பது வேற்றுமை மயக்கம். அகரம் சாரியை.] (௧௫)

௪௨௫. ஏனைமுன் வரினே தானிலை யின்றே.

இது, மேலனவற்றிற்குப் பிறகணத்தோடு முடிபு கூறுதல் நுதலிற்று.

இ-ள்:—ஏனை முன்வரின் தான் நிலையின்று - (அச்சுட்டுமுதல் உகர ஈறு உயிர்க் கணம் ஒழிந்த) பிற கணங்கள் முன்வரின் அவ் ஆய்தம் நிலையின்றி முடியும்.

உ-ம்:—அது கடிது, இது கடிது, உது கடிது; சிறிது, தீது, பெரிது; ஞான்றது, நீண்டது, மாண்டது; யாது, வலிது எனவரும். [முன்னைய ஏகாரம் அசை. பின்னையது ஈற்றசை.] (௧௬)

௪௨௬. அல்லது கிளப்பி னெல்லா மொழியும்
சொல்லிய பண்பி னியற்கை யாகும்.

இஃது, ஆறு ஈற்றுக் குற்றியலுகரத்திற்கு அல்வழி முடிபு கூறுதல் நுதலிற்று.

இ-ள்:—அல்லது கிளப்பின் - அல்வழியைச் சொல்லும் இடத்து, எல்லா மொழியும் - ஆறு ஈற்றுக் குற்றியலுகாமும், சொல்லிய பண்பின் இயற்கை ஆகும் - மேற் சொல்லிய பண்பினையுடைய இயல்பாய் முடியும்.

உ-ம்:—நாகு கடிது, வரகு கடிது, தெள்கு கடிது, எஃகு கடிது, குரங்கு கடிது; சிறிது, தீது, பெரிது எனவரும்.

'எல்லா மொழியும்' என்றதனால், வினைச்சொல்லும் வினைக்குறிப்புச்சொல்லும் இயல்பாய் முடிந்தன கொள்க. கிடந்தது குதிரை, கரிது குதிரை எனவரும்.

'சொல்லிய' என்றதனான், இருபெயரொட்டுப் பண்புத்தொகை முடிபு கொள்க. காட்டுக்கானம், குருட்டெருது எனவரும்.

'பண்பின்' என்றதனான், ஐ என்னும் சாரியை பெற்று வரும் அல்வழி முடிபும் கொள்க. அன்றைக்கூத்தன், பண்டைச்சான்றார், ஓர் யாட்டை யானை, மற்றை யானை எனவரும். (௨௰)

௪௨௭. வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து மிகுமே.

இஃது, அவ் ஈற்றுள்ளும் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்:—வல்லொற்றுத்தொடர்மொழி — வல்லொற்றுத்தொடர்மொழிக் குற்றிய லுகரம், வல்லெழுத்து மிகும் - (வல்லெழுத்து வருவழி) வல்லெழுத்து மிக்கு முடியும்.

உ-ம்:—கொக்குக்கடிது; சிறிது, தீது, பெரிது எனவரும்.

['வல்லொற்றுத்தொடர்மொழி' என்பது ஆகுபெயர். 'ஏகாரம்' ஈற்றசை.] (௨௧)

சஉஅ. சுட்டுச்சினை நீடிய மென்றொடர் மொழியும்
யாவினா முதலிய மென்றொடர் மொழியும்
ஆயிய றிரியா வல்லெழுத் தியற்கை.

இதுவும், அவ் ஈற்றுள் ஒன்றன்கண் ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணர நின்ற இடைச்சொற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள்:—சுட்டு சினை நீடிய மென்றொடர்மொழியும் - சுட்டாகிய சினையெழுத்து நீண்ட மென்றொடர்மொழிக் குற்றியலுகர ஈறும், யா வினா முதலிய மென்றொடர் மொழியும் - யா என்னும் வினா முதலாகிய மென்றொடர்மொழிக் குற்றியலுகர ஈறும், வல்லெழுத்து இயற்கை அ இயல் திரியா - (மேற்கூறிய)வல்லெழுத்து இயற்கையாகிய அவ் இயல்பில் திரியா (து முடியும்).

உ-ம்:— ஆங்குக்கொண்டான்; ஈங்குக்கொண்டான், ஊங்குக்கொண்டான், யாங்குக்கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் எனவரும்.

'இயற்கை' என்றதனான், அக்குற்றுகர ஈற்று வினையெச்ச முடிபு கொள்க. செத்துக்கிடந்தான், இருந்துகொண்டான் எனவரும்.

['மென்றொடர்மொழி' என்ற இரண்டும் ஆகுபெயர், அகர நீட்டம் செய்யுள் விகாரம்.] (உஉ)

சஉகூ. யாவினா மொழியே யியல்பு மாகும்.

இது, மேலவற்றுள் ஒன்றன்மேல் சிறப்புவிதி கூறுதல் நுதலிற்று.

இ-ள்:—யா வினா மொழி இயல்பும் ஆகும் -(அவற்றுள்,) யா வினா மொழி (மேற்கூறிய விகாரமேயன்றி) இயல்பாயும் முடியும்.

உ-ம்;—யாங்குக் கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் எனவரும். ()

சகூ௦. அந்நான் மொழியுந் தந்நிலை திரியா.

இது, மேலவற்றிற்கு நிலைமொழிச் செய்கை கூறுகின்றது.

இ-ள்:—அ நால் மொழியும் -(சுட்டு முதல் மூன்றும் யா முதல் மொழியுமாகிய) அந்நான்கு மொழியும், தம் நிலை திரியா-தம் மெல்லொற்று நிலை திரிந்து வல்லொற்று ஆகாது முடியும்.

'தந்நிலை' என்றதனால், மெல்லொற்றுத்திரியாது மிக்கு முடிவன பிறவும் கொள்க

உ-ம்:—அங்குக் கொண்டான், இங்குக் கொண்டான், உங்குக் கொண்டான், எங்குக் கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் எனவரும்.

'யாமொழி' என்னாது 'வினா' என்றதனால், பிற இயல்பாய் முடிவனவும் கொள்க, முந்து கொண்டான், பண்டு கொண்டான், இன்று கொண்டான், அன்று கொண்டான் எனவரும். ['ஏகாரம்' அசை.] (உச)

௪௩௧. உண்டென் கிளவி யுண்மை செப்பின்
முந்தை யிறுதி மெய்யொடுங் கெடுதலும்
மேனிலை யொற்றே ளகார மாதலும்
ஆமுறை யிரண்டு முரிமையு முடைத்தே
வல்லெழுத்து வரூஉங் காலை யான.

இது, மென்றொடர்மொழியுள் ஒரு வினைக்குறிப்பு மொழிக்கு வேறு முடிபு கூறு தல் நுதலிற்று.

இ-ள்:—உண்டு என் கிளவி உண்மை செப்பின் - உண்டு என்னும் சொல் (உண்டு என்னும் தொழில் ழுநிய) உண்மை என்னும் பண்பு உணர நிற்கும் இடத்து, முந்தை இறுதி மெய்யொடும் கெடுதலும் மேல் நிலை ஒற்று ளகாரம் ஆதலும் - முற்பட்ட ஈற்று க் குற்றியலுகரம் (தான் ஏறி நின்ற) மெய்யோடும் கெடுதலும் அதற்கு மேல் நின்ற ணகார ஒற்று ளகாரம் ஆதலுமாகிய, அ முறை இரண்டும் உரிமையும் உடைத்து - அம் முறைமையுடைய இரண்டினையும் உரித்தாதலும் உடைத்து, வல்லெழுத்து வரும் காலை - வல்லெழுத்து முதல்மொழி வருங்காலத்து.

வல்லெழுத்ததிகாரம் வாரா நிற்ப, ('வல்லெழுத்து வரூஉங்காலை' என்றதனான்) இவ் இருமுடிபும் உள்ளது பகர முதல்மொழி வந்தால், மற்றை மூன்று எழுத்தின் கண்ணும் ஈறு கெடாதே நின்று முடியும என்று கொள்க.

இன்னும் அதனானே, இயல்பு கணத்து இறுதி கெடாதே முடிதல்கொள்க.

உ-ம்:—உள் பொருள், உண்டு பொருள் எனவும்: உண்டு காணம், உண்டு சாக் காடு, உண்டு தாமரை எனவும்: உண்டுஞாண்; நூல், மணி, யாழ், வட்டு, அடை, ஆடை எனவும் வரும்.

'உள்பொருள்' என்பது பண்புத்தொகை முடிபு அன்றோ எனின், அஃது ஓசை ஒற்றுமைபடச்சொல்லும் வழியது; இஃது, ஓசை இடையறவுபடச்சொல்லும் வழியது போலும்.

[உண்மைப்பண்பாவது, ஒரு பொருள் தோன்றுங்கால் தோன்றி அது கெடுந் துணையும் உண்டாய் நின்ற தன்மை. 'ஏகாரம்' அசை. அகர நீட்டமும் உகர நீட்டமும் செய்யுள் விகாரம். 'ஆன்' இடைச்சொல்; அகரம் சாரியை.] (௭௯)

௪௩௨. இருதிசை புணரி னேயிடை வருமே.

இது, குற்றுகர ஈற்றுத்திசைப் பெயர்க்கு அல்வழிக்கண் வேறு முடிபு கூறுகின் றது.

இ-ள்:—இருதிசை புணரின் ஏ இடை வரும் - இரண்டு பெருந்திசைகள் (தம் மிற்) புணரின் ஏ என்னும் சாரியை இடை வந்து புணரும்,

உ-ம்:—வடக்கே தெற்கு, கிழக்கே மேற்கு எனவரும். ['ஏகாரம்' ஈற்றசை.] (௮௦)

௪௩௩. திரிபுவேறு கிளப்பி னொற்று மிறுதியும்
கெடுதல் வேண்டு மென்மனார் புலவர்
ஒற்றுமெய் திரிந்து னகார மாகும்
தெற்கொடு புணருங் காலை யான.

இஃது, அப்பெருந்திசையோடு கோணத்திசை புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—திரிபு வேறு கிளப்பின் - (அப்பெருந்திசைகளோடு) கோணத்திசைகளை வேறாகப் புணர்க்கும் இடத்து, ஒற்றும் இறுதியும் கெடுதல் வேண்டும் என்மனார் புலவர் - (அவ் உகரம் ஏறி நின்ற) ஒற்றும் அவ் ஈற்று உகரமும் கெட்டு முடிதல் வேண்டுமென்று சொல்லுவர் புலவர்; தெற்கொடு புணரும் காலை - தெற்கு என்னும் திசையோடு புணரும் காலத்து, ஒற்று மெய் திரிந்து னகாரம் ஆகும் - (அதன்கண் நின்ற) றகார ஒற்று (த்தன் வடிவு) திரிந்து னகாரமாய் முடியும்.

'திரிந்து' என்றதனான், வடக்கு என்பதன்கண் இடை நின்ற ககர ஒற்றுக் கெடுக்க.

உ-ம்:—வட கிழக்கு, வட மேற்கு: தென் கிழக்கு, தென் மேற்கு எனவரும்.

'வேறு' என்றதனால், திசைப்பெயரொடு பொருட்பெயருக்கும் இவ்விதி கொள்க. வட கடல், வட வரை எனவரும்.

'மெய்' என்றதனான், அத்திசைப்பெயரோடு பொருட்பெயர் புணருமிடத்து இறுதியும் முதலும் திரிந்து முடிவனவெல்லாம் கொள்க. கீழ் கூரை, மேல் கூரை எனவரும். (௨௭)

௪௩௪. ஒன்று முதலாக வெட்ட னிறுதி
எல்லா வெண்ணும் பத்தன் முன்வரின்
குற்றிய லுகர மெய்யொடுங் கெடுமே
முற்றவின் வரூஉ மிரண்டலங் கடையே.

இஃது, இவ்வீற்று எண்ணுப்பெயரோடு எண்ணுப்பெயருக்கு முடிபு கூறுகின்றது.

இ-ள்:—ஒன்று முதலாக எட்டு என் இறுதி எல்லா எண்ணும் - ஒன்று என்னும் சொல் முதலாக எட்டு என்னுஞ் சொல் இறுதியாகவுள்ள எல்லா எண்ணுப்பெயரும், பத்தன் முன்வரின் - பத்து என்னும் எண்ணுப்பெயர் முன்வரின், குற்றியலுகரம் மெய்யொடும் கெடும் - (அப் பத்து என்னும் சொல்லிற்) குற்றியலுகரம் (தான் ஏறி நின்ற) மெய்யோடும் கெட்டு முடியும்; இரண்டு அலம் கடை முற்ற இன் வரும் - இரண்டாகிய எண்ணுப்பெயர் அல்லாத எண்ணுப்பெயரிடத்து முடிய இன் வந்து புணரும்.

உ-ம்:—பதினொன்று, பதின்மூன்று, பதினான்கு, பதினைந்து, பதினாறு, பதினேழு, பதினெட்டு எனவரும்.

நிலைமொழி முற்கூறாததனால், பிறமொழியும் அவ் இன்பேறு கொள்க. ஒன்பதின்பால், ஒன்பதின்கூறு எனவரும்.

'முற்ற' என்றதனான், மேல் எடுத்தோத்தானும் இலேசானும் இன்பெற்றவழி பதிற்றொன்று, பதிற்றிரண்டு என்றாற்போல முடிபுகள் வேறுபட வருவனவெல்லாம் கொள்க.

['ஏகாரம்' இரண்டும் ஈற்றசை. உகர நீட்டம் செய்யுள் விகாரம்.] (௨௮)

௪௩௫. பத்தனொற் றுக்கெட னகார மிரட்டல்
ஒத்த தென்ப விரண்டுவரு காலை.

இது, மேல் இன் பெறுதென்று விலக்கிய அதற்குப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்:—பத்தன் ஒற்று கெட னகாரம் இரட்டல் — பத்து என்னும் சொல்லின் நின்ற தகர ஒற்றுக் கெட னகர ஒற்று வந்து இரட்டுதல், ஒத்தது என்ப—பொருந்திற்று என்று சொல்லுப [புலவர்], இரண்டு வரு காலை — இரண்டு என்னும் எண் வரும் காலத்து.

உ-ம்:—பன்னிரண்டு எனவரும். (உக)

௪௩௬. ஆயிரம் வரினு மாயிய றிரியாது.

இதுவும், எண்ணுப் பெயர்க்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

இ-ள்:— ஆயிரம் வரினும்-(மேற்கூறிய பத்து என்னும் எண்ணுப்பெயர் முன்னர் ஒன்று முதலாகிய எண்ணுப் பெயரேயன்றி) ஆயிரம் என்னும் எண்ணுப் பெயர் வந்தாலும், அ இயல் திரியாது — மேல் ஈறு கெட்டு இன் பெற்ற இயல்பில் திரியாதே முடியும்.

உ-ம்:—பதினாயிரம் எனவரும். [அகர நீட்டம் செய்யுள்விகாரம்.] (௩௰)

௪௩௭. நிறையு மளவும் வருஉங் காலையும்
குறையா தாகு மின்னென் சாரியை.

இஃது, எண்ணுப் பெயரொடு நிறைப் பெயரும் அளவுப் பெயரும் புணர்க்கின்றது.

இ-ள்:—நிறையும் அளவும் வரும் காலையும் — (மேல் நின்ற பத்து என்பதன்முன்) நிறைப்பெயரும் அளவுப்பெயரும் வரும் காலத்தும், இன் என் சாரியை குறையாது ஆகும் — (அவ்) இன் என்னும் சாரியை குறையாது வந்து முடியும்.

உ-ம்:—பதின்கழஞ்சு; தொடி, பலம் எனவும்: கலம், சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு எனவும் வரும்.

'குறையாதாகும்' என்றதனால், பத்து என்பதன் முன்னர்ப் பொருட்பெயர்க்கு வரும் முடிபும் கொள்க. பதின்றிங்கள், பதிற்றுமுழம், பதிற்றுவேலி, பதிற்றிதழ் எனவரும்.

௪௩௮. ஒன்றுமுத லொன்பா னிறுதி முன்னர்
நின்ற பத்த னொற்றுக்கெட வாய்தம்
வந்திடை நிலையு மியற்கைத் தென்ப
கூறிய வியற்கைக் குற்றிய லுகரம்
ஆற னிறுதி யல்வழி யான.

இஃது, எண்ணுப் பெயரோடு எண்ணுப் பெயர்க்கு முடிபு கூறுகின்றது.

இ-ள்:—ஒன்று முதல் ஒன்பான் இறுதி முன்னர் நின்ற பத்தன் ஒற்று கெட ஆய்தம் வந்து இடை நிலையும் இயற்கைத்து என்பர்— ஒன்று முதலாக ஒன்பது ஈறாகச் சொல்லப்படுகின்ற எண்ணுப் பெயர்களின் முன்னர் (வருமொழியாய் வந்து) நின்ற

பத்து என்னும் சொல்லினது தகர ஒற்றுக் கெட ஆய்தமானது வந்து இடை[யில்]நிலை பெறும் இயல்பையுடைத்தென்று சொல்லுவர் [புலவர்]. 'ஆறன் இறுதி அல்வழி குற்றியலுகரம் கூறிய இயற்கை,— (அவற்றுள்) ஆறு என்னும் ஈறு அல்லாத இடத்து குற்றியலுகரம் மேற்கூறிய இயற்கை (யாய் மெய்யோடும் கெட்டு முடியும்).

உ-ம்:—ஒருபஃது, இருபஃது என ஒட்டுக.

'வந்து' என்றதனால், ஆய்தமாய்த் திரியாது கெட்டு ஒருபது என்றுமாம். ['ஆன்' இடைச்சொல். அகரம் சாரியை.] (௩௨)

௪௩௩. முதலீ ரெண்ணி னொற்றுரகர மாகும்
உகரம் வருத லாவயி னான.

இது, மேற்கூறிய முடிபிற்கு உரிய தொன்று உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—முதல் ஈர் எண்ணின் ஒற்று ரகரம் ஆகும்—(அவற்றுள்) முதற்கண் நின்ற இரண்டு எண்ணின் ஒற்று ரகார ஒற்றாம், ஆவயின் உகரம் வருதல் — அவ் விடத்து உகரம் வருக.

உ-ம்:—ஒருபஃது எனவரும். ['ஆன்' இடைச்சொல். அகரம் சாரியை.] (௩௩)

௪௩௪. இடைநிலை ரகர மிரண்டெ னெண்ணிற்கும்
நடைமருங் கின்றே பொருள்வயி னான.

இதுவும் அது.

இ-ள்:—இரண்டு என் எண்ணிற்கும் இடைநிலை ரகரம் பொருள்வயின் நடைமருங்கு இன்று—அவ் இரண்டு என்னும் எண்ணிற்கும் இடை நின்ற ரகாரம் அம்மொழி பொருளாமிடத்து நடக்கும் இடம் இன்றிக் கெடும்.

உ-ம்:—இருபஃது எனவரும். ['ஏகாரம்' அசை. 'ஆன்' என்பதனை மேற்கூறியாங்குக் கொள்க.] (௩௪)

௪௩௫. மூன்று மாறு நெடுமுதல் குறுகும்
மூன்ற னொற்றே பகார மாகும்.

இதுவும் அது.

இ-ள்:—மூன்றும் ஆறும் நெடு முதல் குறுகும் — மூன்றும் என்னும் எண்ணும் ஆறு என்னும் எண்ணும் நெடு முதல் குறுகி முடியும். மூன்றன் ஒற்று பகாரம் ஆகும்- மூன்று என்னும் எண்ணின்கண் நின்ற னகார ஒற்றுப் பகர ஒற்றாய் முடியும்.

உ-ம்:—முப்பஃது [,அறுபஃது] எனவரும். [ஏகாரம் அசை. (௩௫)

௪௩௬. நான்க னொற்றே றகார மாகும்.

இதுவும் அது.

இ-ள்:—நான்கன் ஒற்று றகாரம் ஆகும் — நான்கு என்னும் எண்ணின்கண் நின்ற னகார ஒற்று றகர ஒற்றாய் முடியும்.

உ-ம்:—நாற்பஃது எனவரும். [ஏகாரம் அசை.] (௩௬)

௪௪௩. ஐந்த னொற்றே மகாரம் ஆகும்.

இதுவும் அது.

இ-ள்:—ஐந்தன் ஒற்று மகாரம் ஆகும் — ஐந்து என்னும் எண்ணின்கண் நின்ற நகார ஒற்று மகார ஒற்றாய் முடியும்.

உ-ம்:—ஐம்பஃது எனவரும்.

ஆறன் நெடு முதல் குறுகியவாறே நின்று அறுபஃது எனவரும். 'ஏழு' குற்றுகரம் அன்றாம். (௧௭)

௪௪௪. எட்ட னொற்றே ணகார மாகும்.

இதுவும் அது.

இ-ள்:—எட்டன் ஒற்று ணகாரம் ஆகும் — எட்டு என்னும் எண்ணின்கண் நின்ற டகார ஒற்று ணகார ஒற்றாய் முடியும்.

உ-ம்:—எண்பஃது எனவரும். [ஏகாரம் அசை.] (௧௮)

௪௪௫. ஒன்பா னொகரமிசைத் தகர மொற்றும்
முந்தை யொற்றே ணகார மிரட்டும்
பஃதென் கிளவி யாய்த பகரங்கெட
நிற்றல் வேண்டு மூகாரக் கிளவி
ஒற்றிய தகரம் றகார மாகும்.

இதுவும் அது.

இ-ள்:—ஒன்பான் ஒகர மிசை தகரம் ஒற்றும் —(நிலைமொழியாகிய) ஒன்பது என்னும் சொல்லின் ஒகரத்திற்கு மேலாகத் தகரம் ஒற்றாய் மிக்கு வரும். முந்தை ஒற்று ணகாரம் இரட்டும் - முன் சொன்ன ஒகரத்தின் முன்னர் னகர ஒற்று இரண்டு ணகார ஒற்றாய் மிக்கு வரும். பஃது என் கிளவி பகரம் ஆய்தம் கெட ஊகாரக் கிளவி நிற்றல் வேண்டும் — (வருமொழியாகிய) பஃது என்னும் சொல் தன்கண் பகரமும் ஆய்தமும் கெட (நிலைமொழியில் இரட்டிய ணகரத்தின் பின்னர்) ஊகாரமாகிய எழுத்து நிற்றல் வேண்டும்; ஒற்றிய தகரம் றகாரம் ஆகும் — (வருமொழியாகிய பஃது என்பதன் ஈற்ற தன்மேல் ஏறிய உகரம் கெடாது பிரிந்து நிற்ப)ஒற்றாய் நின்ற தகரம் றகார ஒற்றாகும்.

இஃது, ஒன்பதும் பத்தும் என நின்றால் முடியற்பால [இன்ன] வென்பது. பகர ஆய்தம் என்னாத முறைபன்றிய கூற்றினான், நிலை மொழிக்கண் பகரக்கேடும் கொள்க. குற்றியலுகரமும் அஃது ஏறிய மெய்யும் முன்னர் மாட்டேற்றாற் கெட்டன. ['ஏகாரம்' அசை. [இச்சூத்திரம் "இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்" ஆம்.]

உ-ம்:—தொண்ணூறு எனவரும். (௧௯)

௪௪௬. அளந்தறி கிளவியு நிறையின் கிளவியும்
கிளந்த வியல தோன்றுங் காலை.

இது, மேற்கூறிய ஒன்று முதல் ஒன்பான்களோடு அளவுப்பெயரும் நிறைப் பெயரும் முடியுமாறு கூறுகின்றது.

இ-ள்:—அளந்து அறி கிளவியும் நிறை என் கிளவியும் தோன்றும் காலை — (மேற் கூறிய ஒன்று முதல் ஒன்பான்களின் முன்னர்) அளந்து அறியப்படும் அளவுப் பெயர்ச் சொல்லும் நிறை என்னும் பெயர்ச்சொல்லும் தோன்றுங்காலத்து, கிளந்த இயல — அவ் ஒன்று முதல் ஒன்பான்கள் மேல் பத்து என்பதனோடு புணரும் வழி கிளந்த இயல் பினவாய் முடியும்.

உ-ம்:—ஒரு கலம், இரு கலம்; சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி எனவும்: கழஞ்சு, தொடி, பலம் எனவும் வரும்.

'தோன்றுங்காலை' என்றதனான், அவ்வெண்களின்முன் எடுத்தோத்தானும் இலே சானும் முடியாது நின்ற எண்ணுப்பெயரை யெல்லாம் இவ்விதியும் பிறவிதியும் எய்து வித்து முடித்துக்கொள்க.

ஒரொன்று, ஓரிரண்டு; ஈரொன்று, ஈரிரண்டு; ஒரு முந்திரிகை, இரு முந்திரிகை; ஓரரைக்கால், ஈரரைக்கால்; ஒரு கால், இரு கால்; ஓரரை, ஈரரை; ஒரு முக்கால், இரு முக்கால் என ஒட்டிக்கொள்க. (௪௰)

௪௪௭. மூன்ற னொற்றே வந்த தொக்கும்.

இது, மாட்டேறு எய்தாததற்கு வேறு முடிபு கூறுதல் நுதலிற்று.

இ-ள்:—மூன்றன் ஒற்று வந்தது ஒக்கும் — மூன்றும் எண்ணின்கண் நின்ற னகார ஒற்று வருமொழியாய் வந்த அளவுப்பெயர் நிறைப்பெயரின் முத[லி]ல் வந்த ஒற்றோடு ஒத்த ஒற்றாய் முடியும்.

உ-ம்:—முக்கலம்; சாடி, தூதை, பானை எனவும்: கழஞ்சு, தொடி, பலம் எனவும் வரும்.

மாட்டேற்றானே நாற்கலம்; சாடி, தூதை, பானை எனவும்: கழஞ்சு, தொடி பலம் எனவும் வரும். [ஏகாரம் அசை.] (௪௧)

௪௪௮. ஐந்த னொற்றே மெல்லெழுத் தாகும்.

இதுவும் அது.

இ-ள்:—ஐந்தன் ஒற்று மெல்லெழுத்து ஆகும் — ஐந்தாவதன்கண் நின்ற நகர ஒற்று (மேல் வருகின்ற வருமொழி முதல் வல்லெழுத்திற்கு ஏற்ற) மெல்லெழுத்தாய் முடியும்.

உ-ம்:—ஐங்கலம்; சாடி, தூதை, பானை எனவும்: ஐங்கழஞ்சு, தொடி, பலம் எனவும் வரும். [ஏகாரம் அசை.] (௪௨)

௪௪௯. கசதப முதன்மொழி வரூஉங் காலை.

இது, மேற்கூறிய மூன்றற்கும் ஐந்தற்கும் வருமொழி வரையறுக்கின்றது.

இ-ள்:—க ச த ப முதல் மொழி வரும் காலை — (மூன்றன் ஒற்று வந்ததொப்ப தூஉம் ஐந்தன் ஒற்று மெல்லெழுத்தாவதூஉம் அவ்வளவுப்பெயர் நிறைப்பெயர் ஒன்ப தினும் வன்கணமாகிய) க ச த ப முதல் மொழிகள் வந்த இடத்து.

மேன் மாட்டேற்றானே, அறுகலம்; சாடி, தூதை, பானை எனவும்: அறுகழஞ்சு; தொடி, பலம் எனவும் வரும்.

எழு குற்றுகர ஈறன்மையின், மாட்டேறு எலாதாயிற்று. [முந்தின இரண்டு சூத்திரமும் இதுவும் ஒரு சூத்திரமாயிருந்து கால அளவில் மூன்றாயின போலும்.] (சரு)

சறுய. நமவ வென்னு மூன்றொடு சிவணி
அகரம் வரினு மெட்டன்மு னியல்பே.

இது, வேண்டா கூறி வேண்டியது முடித்தல் நுதலிற்று.

இ-ள்:—ந ம வ என்னும் மூன்றொடு சிவணி அகரம் வரினும் - (அளவுப்பெயர் நிறைப்பெயர்களில் மென்கணத்து இரண்டும் இடைக்கணத்து ஒன்றுமாகிய) ந ம வ என்னும் மூன்றனோடும் பொருந்தி (உயிர்க்கணத்து) அகர முதல்மொழி வரினும் (உம்மையால் அவ்வுயிர்க்கணத்து ஒழிந்த உகரமும் கூறாத வல்லெழுத்துக்களும் வரினும்), எட்டன் முன் இயல்பு - எட்டென்பதன் முன் (மேற்கூறி நின்ற விகாரமே விகாரமாக வேறோர் விகாரமின்றி) இயல்பாய் முடியும்.

உ-ம்:—எண்கலம்; சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல் உழக்கு எனவும்: எண்கழஞ்சு; தொடி, பலம் எனவும் வரும்.

இவ் வேண்டா கூறலான், எண்ணகல் எனத் தொடர்மொழிக்கண் ஒற்றிரட்டுதல் கொள்ளப்பட்டது. ['ஏகாரம்' ஈற்றசை.] (சச)

சறுக. ஐந்து மூன்று நமவருங் காலை
வந்த தொக்கு மொற்றிய னிலையே.

இதுவும், மேல்மாட்டேற்றோடு ஒவ்வா வேறு முடிபு கூறுதல் நுதலிற்று.

இ-ள்:—ஐந்தும் மூன்றும் ந ம வரும் காலை — ஐந்து என்னும் எண்ணும் மூன்று என்னும் எண்ணும் நகர முதல்மொழியும் மகர முதல்மொழியும் வருங்காலத்து, ஒற்று இயல் நிலை வந்தது ஒக்கும் — தங்கண்நின்ற ஒற்று நடக்கும் நிலைமை (சொல்லின்) அவ் வருமொழிமுத[லி]ல் வந்த ஒற்றோடு ஒத்த ஒற்றாய் முடியும்.

உ-ம்:—முந்நாழி, மும்மண்டை; ஐந்நாழி, ஐம்மண்டை எனவரும்.

மூன்றும் ஐந்தும் என்றது முறையன்றிய கூற்றினான், நானாழி என்னும் முடிபின் கண் விகாரமாகிய னகரத்தின்முன்னர் வருமொழிநகரத்திரிபும், அது காரணமாக நிலைமொழி னகரக் கேடும் கொள்ளப்பட்டன. ['ஏகாரம்' ஈற்றசை.] (சரு)

சறுஉ. மூன்ற னொற்றே வகரம் வரும்வழித்
தோன்றிய வகரத் துருவா கும்மே.

இதுவும் அது.

இ-ள்:—மூன்றன் ஒற்று வகாரம் வரும் வழி — மூன்றும் எண்ணின்கண் நின்ற னகர ஒற்று வகர வருமொழி வரும் இடத்து, தோன்றிய வகாரத்து உருவு ஆகும்—வருமொழியாய வகரத்து உருவாய் முடியும்.

உ-ம்:—முவ்வட்டி எனவரும்.

'தோன்றிய' என்றதனான், முதல் நீண்டு வகர ஒற்றின்றி மூவட்டி என்றுமாம்.

இன்னும் அதனானே, முதல் நீளாது ஒற்றின்றி முவட்டி என்றுமாம். [மகர ஒற்று மிகுதி செய்யுள் விகாரம். ஏகாரம் ஈற்றசை.] (சக)

௪௱௩. நான்க னொற்றே லகார மாகும்.

இதுவும் அது.

இ-ள்:—நான்கன் ஒற்று லகாரம் ஆகும்— நான்காம் எண்ணின்கண் நின்ற னகார ஒற்று (வகரம் வந்தால்) லகர ஒற்றாய்த் திரிந்து முடியும்.

உ-ம்:—நால் வட்டி எனவரும். ['ஏகாரம்' அசை.] (௯௭)

௪௱௪. ஐந்த னொற்றே முந்தையது கெடுமே.

இதுவும் அது.

இ-ள்:—ஐந்தன் ஒற்று முந்தையது கெடும்— ஐந்தாம் எண்ணின்கண் நின்ற நகர ஒற்று (வகரம் வந்தால்) முன் நின்ற வடிவு கெட்டு முடியும்.

உ-ம்:—ஐ வட்டி எனவரும்.

'முந்தை' என்றதனால், நகர ஒற்றுக் கெடாது அவ்வகரமாய்த் திரிந்து ஐவ்வட்டி என்றும் ஆம். [முதல் ஏகாரம் அசை. இரண்டாம் ஏகாரம் ஈற்றசை.] (௯௮)

௪௱௫. முதலீ ரெண்ணின் முன் னுயிர்வரு காலை
தவலென மொழிப வுகரக் கிளவி
முதனிலை நீட லாவயி னான.

இதுவும் அது.

இ-ள்:—முதல் ஈர் எண்ணின்முன் உயிர் வரு காலை — முற்பட்ட இரண்டு எண்ணின்முன் உயிர் முதல்மொழி வருங்காலத்து, உகரக் கிளவி தவல் என மொழிப — உகரமாகிய எழுத்துக் கெடும் என்று சொல்லுவர் [புலவர்.] முதல் நிலை அ வயின் நீடல்— (அவ்வெண்ணின்) முதற்கண் நின்ற எழுத்துக்கள் அவ்விடத்து நீண்டு முடிக.

உ-ம்:—ஓரகல், ஈரகல், ஓருழக்கு, ஈருழக்கு எனவரும். ['ஆன்' இடைச்சொல் அகரம் சாரியை.] (௯௯)

௪௱௬. மூன்று நான்கு மைந்தன் கிளவியும்
தோன்றிய வகரத் தியற்கை யாகும்.

இதுவும் அது.

இ-ள்:—மூன்றும் நான்கும் ஐந்து என் கிளவியும் — மூன்று என்னும் எண்ணும் நான்கு என்னும் எண்ணும் ஐந்து என்னும் எண்ணுச்சொல்லும், தோன்றிய வகரத்து இயற்கையாகும் —(மேல்) தோன்றிமுடிந்த வகரத்து இயற்கையாய் மூன்றன்கண் வகர ஒற்றும் நான்கின்கண் லகர ஒற்றும் ஐந்தன்கண் ஒற்றுக் கெட்டும் முடியும்.

உ-ம்:—முவ்வகல், மூவ்வுழக்கு எனவும்; நாலகல், நாலுழக்கு எனவும்; ஐயகல், ஐயுழக்கு எனவும் வரும்.

'தோன்றிய' என்றதனான், மேல் மூன்று என்பது முதல் நீண்ட இடத்து நிலைமொழி னகர ஒற்றுக் கெடுத்துக்கொள்க. (௱)

சடுஎ. மூன்றன் முதனிலை நீடலு முரித்தே
உழக்கென் கிளவி வழக்கத் தான.

இதுவும் அது.

இ-ள்:—மூன்றன் முதல் நிலை உழக்கு என் கிளவி வழக்கத்தான்-மூன்று என்னும் எண்ணின்கண் முத[லி]ல் நின்ற எழுத்து உழக்கு என்னுங் கிளவியது வழக்கிடத்து, நீடலும் உரித்து – குறுகாது நீண்டு முடிதலும் உரித்து.

உ-ம்:—மூவுழக்கு எனவரும்.

'வழக்கத்தான்' என்றதனான், அகல் என்பதன்கண்ணும் இச்செய்கை கொள்க.

மூவகல் எனவரும். [ஏகாரம் ஈற்றசை. 'வழக்கத்தான்' வேற்றுமை மயக்கம். அகரம் சாரியை.] (௫௩)

சடுஅ. ஆறென் கிளவி முதனீ டும்மே.

இதுவும் அது.

இ-ள்:—ஆறு என் கிளவி முதல் நீடும்– ஆறு என்னும் சொல் (உயிர் முதல் மொழி வந்தால் முன் குறுகி நின்ற) முதலெழுத்து நீண்டு முடியும்.

உ-ம்:—ஆறகல், ஆறுழக்கு எனவரும். [மகர ஒற்று மிகுதி செய்யுள் விகாரம். ஏகாரம் ஈற்றசை.] (௫௪)

சடுகூ. ஒன்பா னிறுதி யுருபுநிலை திரியா
தின்பெறல் வேண்டுஞ் சாரியை மொழியே.

இதுவும் அது.

இ-ள்:—ஒன்பான் இறுதி உருபு நிலை திரியாது சாரியை மொழி இன் பெறல் வேண்டும் – ஒன்பது என்னும் எண்ணின் இறுதி தன் வடிவு நிலை திரியாது சாரியை மொழியாகிய இன் பெற்று முடிதல் வேண்டும்.

உ-ம்:—ஒன்பதின்கலம்; சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு எனவும்: கழஞ்சு, தொடி, பலம் எனவும் வரும்.

'உருபு' என்றதனான், ஒன்பதிற்றகல் என்புழி இரட்டிய றகரமாகக்கொள்க. [ஏகாரம் ஈற்றசை.] (௫௫)

சகூ௰. நூறுமுன் வரினுங் கூறிய வியல்பே.

இஃது, ஒன்று முதல் ஒன்பான்களோடு நூறு என்பதன் முடிபு கூறுகின்றது.

இ-ள்:—நூறு முன் வரினும் கூறிய இயல்பு – நூறு என்பது (ஒன்று முதல் ஒன்பான்கண்) முன் வரினும் (மேல் பத்தென்பனோடு புணரும் வழி) கூறிய இயல்பு எய்தி முடியும்.

உ-ம்:—ஒரு நூறு, இரு நூறு, அறு நூறு, எண் ணூறு எனவரும். இவை மாட்டேற்றானே முடிந்தன. (௫௬)

சகூக. மூன்ற னொற்றே நகார மாகும்.

இது, மாட்டேற்றோடு ஒவ்வாததற்கு வேறு முடிபு கூறுதல் நுதலிற்று.

இ-ள்:—மூன்றன் ஒற்று நகாரம் ஆகும் - மூன்றாம் எண்ணின்கண் நின்ற னகர ஒற்று நகர ஒற்றாகும்.

உ-ம்:—முந்நூறு எனவரும். ['ஏகாரம்' அசை] (௬௫)

௪௬௨. நான்கு மைந்து மொற்றுமெய் திரியா.

இதுவும் அது.

இ-ள்:—நான்கும் ஐந்தும் ஒற்று மெய் திரியா - நான்கு என்னும் எண்ணும் ஐந்து என்னும் எண்ணும் தம் ஒற்றுக்கள் நிலை திரியாது முடியும்.

உ-ம்:—நானூறு, ஐந்நூறு எனவரும்.

'மெய்' என்றதனால், நானூறு என்புழி வருமொழி ஒற்றாகிய நகரக்கேடு கொள்க. இன்னும் அதனானே, ஒற்றின்றி ஐநூறு எனவரும் முடிபும் கொள்க. [முந்திய இரண்டு சூத்திரங்களும் இதுவும் ஒன்றாயிருந்து கால அளவில் மூன்றாயின போலும்.] (௬௬)

௪௬௩. ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே
முந்தை யொற்றே ளகார மிரட்டும்
நூறென் கிளவி நகார மெய்கெட
ஊஆ வாகு மியற்கைத் தென்ப
ஆயிடை வருத லிகார ரகாரம்
ஈறுமெய் கெடுத்து மகார மொற்றும்.

இதுவும் அது.

இ-ள்:—ஒன்பான் முதல் நிலை முந்து கிளந்த அற்று - ஒன்பது என்னும் சொல்லின் முதல் நின்ற ஒகரம் மேல் (பத்தென்பதனொடு புணரும் வழிக்) கூறியவாறு போல ஒகரமிசைத் தகர ஒற்று மிகும். முந்தை ஒற்று ளகாரம் இரட்டும் - அவ்வொகரத்தின் முன்னின்ற (னகர) ஒற்று இரண்டு ளகர ஒற்றாம். நூறு என் கிளவி நகார மெய் கெட ஊ ஆ ஆகும் இயற்கைத்து என்ப -(வருமொழியாகிய) நூறு என்னும் சொல்லும் நகாரமாகிய மெய் கெட (அதன் மேல் ஏறிய) ஊகாரம் ஆகார ஆம் இயல்பையுடைத்து என்பர் (புலவர்.) அ இடை இகாரம் ரகாரம் வருதல் - அம்மொழியிடை இகாரமும் ரகாரமும் வருக. ஈறு மெய் கெடுத்து மகாரம் ஒற்றும் - இதற்கு ஈறாகிய குற்றியலுகரத்தினையும் அதேறி நின்ற றகார ஒற்றினையும் கெடுத்து ஓர் மகரம் ஒற்றாய் வந்து முடியும்.

'மெய்' என்றதனான், நிலைமொழிக்கண் நின்ற பகரம் கெடுக்க.

உ-ம்:—தொள்ளாயிரம் எனவரும். ['அகரம்' செய்யுள் விகாரத்தாற் கெட்டது. ஏகாரங்கள் அசைகள். அகரச்சுட்டின் நீட்டம் செய்யுள் விகாரம்.][இச்சூத்திரமும் "இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்" ஆம்.] (௬௭)

௪௬௪. ஆயிரக் கிளவி வரூஉங் காலை
முதலீ ரெண்ணி னுகரங் கெடுமே.

இது, அவ்வொன்று முதல் ஒன்பான்கள்முன் ஆயிரம் என்பது வருங்கால் முடிபு கூறுகின்றது.

இ-ள்:—ஆயிரக் கிளவி வரும் காலை முதல் ஈர் எண்ணின் உகரம் கெடும் - ஆயிரம் என்னும் சொல் (ஒன்று முதல் ஒன்பான்கள்) முன் வருங்காலத்து முதல் ஈர் எண்ணின் கண் பெற்று நின்ற உகரம் கெட்டு முடியும்.

உ-ம்:—ஓராயிரம், இராயிரம் எனவரும். ['ஏகாரம்' ஈற்றசை. முதல் ஈர்-முதல் இரண்டு. அவையாவன ஒரு, இரு என்பன.] (௫௮)

சசுரு. முதனிலை நீடினு மான மில்லை.

இஃது, எய்தியதன் மேல் சிறப்பு விதி கூறுதல் நுதலிற்று.

இ-ள்:—முதல் நிலை நீடினும் மானம் இல்லை - அம்முதல் ஈர் எண்ணின் முதற்கண் நின்ற ஒகர இகரங்கள் நீண்டு முடியினும் குற்றம் இல்லை.

உ-ம்:—ஓராயிரம், ஈராயிரம் எனவரும். (௫௯)

சசுசு. மூன்ற னொற்றே வகார மாகும்.

இதுவும் மாட்டேற்றோடு ஒவ்வா முடிபு கூறுதல் நுதலிற்று.

இ-ள்:—மூன்றன் ஒற்று வகாரம் ஆகும் - மூன்றும் எண்ணின்கண் நின்ற னகார ஒற்று வகர ஒற்றாய் முடியும்.

உ-ம்:—மூவ்வாயிரம் எனவரும்.

'முதனிலை' என்றதனான், முதல் நீண்டு வகர ஒற்றுக்கெட்டு மூவாயிரம் என்றும் வரும். [ஏகாரம் அசை.] (௬0)

சசுஎ. நான்க னொற்றே லகார மாகும்.

இதுவும் அது.

இ-ள்:—நான்கன் ஒற்று லகாரம் ஆகும் - நான்காம் எண்ணின்கண் நின்ற னகர ஒற்று லகர ஒற்றாய் முடியும்.

உ-ம்:—நாலாயிரம் எனவரும். [ஏகாரம் அசை.] (௬௧)

சசுஅ. ஐந்த னொற்றே யகார மாகும்.

இதுவும் அது.

இ-ள்:—ஐந்தன் ஒற்று யகாரம் ஆகும்- ஐந்தாம் எண்ணின்கண் நின்ற நகர ஒற்று யகர ஒற்றாய் முடியும்.

உ-ம்:—ஐயாயிரம் எனவரும். முன்னர் இவ்வாறு ஓதாமையான், ஐயகல், ஐயுழக்கு [என்பவை] உடம்படு மெய் பெற்றது. [ஏகாரம் அசை.] (௬௨)

சசுகூ. ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்
ஈறுமெய் யொழியக் கெடுதல் வேண்டும்.

இதுவும் அது.

இ-ள்:—ஆறன் மருங்கின் குற்றியலுகரம் ஈறு மெய் ஒழிய கெடுதல் வேண்டும் — ஆறும் எண்ணின்கண் நின்ற குற்றியலுகரம் (தான் ஏறிய) மெய்யாகிய றகர ஒற்றுக் கெடாது நிற்ப (உகரமாகிய அவ்வீறு தானே) கெட்டு முடிதல் வேண்டும்.

உ-ம்:—அறாயிரம் எனவரும்.

திரிந்ததன் திரிபது என்னும் நயத்தான், ஆறன் மருங்கின் என்று ஓதப்பட்டது. ஆறு என்பது அறு எனக்குற்றியலுகரம் முற்றியலுகரமாக ஓதப்பட்டு நின்றமையின், அவ்வுகரக்கேடு ஓதப்பட்டது.

ஈறு எனவும் மெய் எனவும் அவ்வுயிர் மெய்யைப் பிரித்துச் செய்கை ஓதினமையான், அவ்வுயிர் மெய்யினை ஒற்றுமை நயத்தாற் குற்றியலுகரம் என்று ஓதினாகக் கொள்க.

ஆறன் மருங்கின் ஈறு மெய்யொழியக் கெடும் என்னாது குற்றியலுகரம் என்றே தினைமையான், நெடுமுதல் குறுகாதே நின்று ஆறாயிரம் என்றும் ஆம்.

இன்னும் அதனானே "ஆறுகுவதே" [சொல்லதிகாரம் — வேற்றுமையியல் — சூத்திரம் கஅ.] என்றாற் போலப் பொருட்பெயர்க்கண் வரு முடிபும் கொள்க.

மேல் மாட்டேற்றானே எண்ணாயிரம் என முடிந்தது. (சுகூ)

சஎ௦. ஒன்பா னிறுதி யுருபுநிலை திரியா
இன்பெறல் வேண்டுஞ் சாரியை மரபே.

இதுவும் அது.

இ-ள்:—ஒன்பான் இறுதி உருபு நிலை திரியாது சாரியை மரபு இன்பெறல் வேண்டும் — ஒன்பது என்னும் எண்ணின் இறுதிக் குற்றியலுகரம் தன் வடிவு நிலை திரிந்து கெடாது சாரியையாகிய மரபினையுடைய இன்பெற்று முடிதல் வேண்டும்.

உ-ம்:—ஒன்பதினாயிரம் எனவரும்.

உருபு என்றும், நிலை என்றும், சாரியை மரபு என்றும் கூறிய மிகுதியான், ஆயிரமல்லாத பிற எண்ணின்கண்ணும் பொருட்பெயரிடத்தும், இன்னும் உகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும் முடிபும் கொள்க.

ஒன்பதிற்றுக்கோடி, ஒன்பதிற்றொன்று, ஒன்பதிற்றுத்தடக்கை, ஒன்பதிற்றெழுத்து என வரும்.

இன்னும் அவ்விலேசானே, மேல் எண்ணாயிரம் என்ற வழி ஒற்றிரட்டுக் கொள்க. [ஏகாரம் ஈற்றசை.] (சுஅ)

சஎக. நூறா யிரமுன் வருஉங் காலை
நூற னியற்கை முதனிலைக் கிளவி.

இஃது, ஒன்று முதல் ஒன்பான்களோடு நூறு என்னும் அடையடுத்து ஆயிரம் என்பது முடியுமாறு கூறுகின்றது.

இ-ள்:—நூறாயிரம் முன் வரு காலை முதல் நிலைக்கிளவி நூறு என் இயற்கை — நூறாயிரம் என்னும் அடையடுத்த மொழி (ஒன்று முதல் ஒன்பான்கள்) முன்வருங் காலத்து முதனிலைக்கிளவியாகிய ஒன்று என்னும் எண் (மேல் ஒன்று முதல் ஒன்பான்களோடு முடிந்த) நூறு என்னும் சொல் அவ்வொன்றனோடு முடிந்த விகார இயற்கை எய்தி முடியும்.

வழிநிலைக்கிளவியாகிய இரண்டு முதல் எண்கள் விகாரம் எய்தியும் எய்தாதும் இயல்பாயும் முடியும்.

உ-ம்:—ஒரு நூறாயிரம் எனவரும். இரு நூறாயிரம், இரண்டு நூறாயிரம்; மூந்நூறாயிரம், மூன்று நூறாயிரம்; நா னூறாயிரம், நான்கு நூறாயிரம்; ஐந் நூறாயிரம், ஐந்து நூறாயிரம்; அறு நூறாயிரம், ஆறு நூறாயிரம்; எண் ணூறாயிரம், எட்டு நூறாயிரம்; ஒன்பது நூறாயிரம் எனவரும்.

உரையிற் கோடல் என்பதனான், தொள்ளாயிரம் என்ற முடிபினோடு மாட்டேறு சென்றதேனும் அவ்வாறு முடியாதென்று கொள்க.

'முன்' என்பதனான் இன்சாரியைபெற்று ஒன்பதினூறாயிரம் என்றும் ஆம்.

'நிலை' என்றதனான், மூன்றும் ஆறும் இயல்பாய் முடியும் முடிபின்கண் நெடுமுதல் குறுகாமை கண்டு கொள்க. இன்னும் அதனானே நானூறாயிரம் என்புழி வருமொழி நகரக்கேடு கொள்க. (சுகூ)

௪௭௨. நூறென் கிளவி யொன்றுமுத லொன்பாற்
கீறுசினை யொழிய வினவொற்று மிகுமே.

இது, நூறு என்பதனோடு ஒன்று முதல் ஒன்பான்களைப் புணர்க்கின்றது.

இ-ள்:—நூறு என் கிளவி ஒன்று முதல் ஒன்பாற்கு ஈறு சினை ஒழிய இன ஒற்று மிகும்— நூறு என்னும் சொல் ஒன்று முதல் ஒன்பான்களோடு புணருமிடத்து ஈறாகிய குற்றியலுகரமும் அவ்வுகரம் ஏறிய மெய்யாகிய சினையும் கெடாது நிற்ப (சினைக்கு) இனமாகிய இன ஒற்று மிக்குமுடியும்.

உ-ம்:—நூற்றொன்று; இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, எழு, எட்டு, ஒன்பது எனவரும்.

'ஈறுசினை' என்று ஓதிய மிகையானே, நூறு என்பதனோடு பிற எண்ணும் பிற பொருட்பெயரும் இவ்விதியும் பிறவிதியும் முடியுமாறு கொள்க. நூற்றுக்கோடி, நூற்றுப்பத்து, நூற்றுத்தொண்ணூறு எனவும்; நூற்றுக்குறை, நூற்றடுக்கு எனவும் வரும். ['ஏகாரம்' ஈற்றசை.] (௬௬)

௪௭௩. அவையூர் பத்தினு மத்தொழிற் றாகும்.

இஃது, அந்நூறு என்பதனோடு ஒன்று முதல் ஒன்பான்கள் அடையடுத்தவழிப் புணருமாறு கூறுகின்றது.

இ-ள்:—அவை ஊர்பத்தினும் அத்தொழிற்று ஆகும் —(அந்நூறு என்பது)ஒன்று முதல் ஒன்பான்களான் ஊரப்பட்ட பத்தினோடு புணருமிடத்தும் அத்தொழிற்றாய் இன ஒற்று மிக்கு முடியும்.

உ-ம்:—நூற்றொருபஃது; இருபஃது, முப்பஃது, நாற்பஃது, ஐம்பஃது, அறுபஃது, எழுபஃது, எண்பஃது எனவரும்.

'ஆகும்' என்றதனான், நிலைமொழியடையடுத்து வரும் முடிபும் கொள்க. ஒரு நூற்றொருபஃது என ஒட்டுக. (௬௭)

௪௭௪. அளவு நிறையு மாயிய றிரியா
குற்றிய லுகரமும் வல்லெழுத் தியற்கையும்
முற்கிளந் தன்ன வென்மனார் புலவர்.

இஃது, அந்நூறு என்பதனோடு அளவுப்பெயரும் நிறைப்பெயரும் முடியுமாறு கூறுகின்றது.

இ-ள்:—அளவும் நிறையும் அ இயல் திரியா —(அந்நூறு என்பதனோடு புணருமிடத்து) அளவுப்பெயரும் நிறைப்பெயரும் மேற்கூறிய இயல்பில்திரியாதே நின்று இனவொற்று மிக்கு முடியும். குற்றியலுகரமும் வல்லெழுத்து இயற்கையும் முன் கிளந்தால் அன்ன என்மனார் புலவர் —(அவ்விடத்துக்) குற்றியலுகரம் கெடாமையும் (இன ஒற்று மிக்கு வன்றொடர்மொழியாய் நின்றமையான் வருமொழி) வல்லெழுத்து மிகும் இயல்பும் மேல் (வன்றொடர்மொழிக்குக்) கூறிய தன்மையவென்று சொல்லுவர் புலவர்.

உ-ம்:—நூற்றுக்கலம்; சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு எனவும்: கழஞ்சு, தொடி, பலம் எனவும் வரும்.

'திரியா' என்றதனான், நூறு என்பது அடையடுத்த வழியும் இவ்விதி கொள்க.

உ-ம்:—ஒரு நூற்றுக்கலம், இருநூற்றுக்கலம் என ஒட்டுக. [ஆகாரம் செய்யுள் விகாரம். கிளந்து என்பது வினையெச்சத்தொகை.] (சுஅ)

சஎ௫. ஒன்றுமுத லாகிய பத்தூர் கிளவி
ஒன்றுமுத லொன்பாற் கொற்றிடை மிகுமே
நின்ற வாய்தங் கெடுதல் வேண்டும்.

இஃது, ஒன்று முதல் எட்டு ஈறாகிய எண்கள் அடையடுத்த பத்தினோடு ஒன்று முதல் ஒன்பான்களைப் புணர்க்கின்றது.

இ-ள்:—ஒன்று முதலாகிய பத்து ஊர் கிளவி — ஒன்று முதல் எட்டு ஈறாகப் பத்து என்னும் எண் ஊரப்பட்ட சொற்கள், ஒன்று முதல் ஒன்பாற்கு—அவ்வொன்று முதல் ஒன்பான்கள் வருமொழியாய் வந்து புணருமிடத்து, நின்ற ஆய்தம் கெடுதல் வேண்டும் — (ஆண்டு) நின்ற ஆய்தம் கெட்டு முடிதல் வேண்டும், ஒற்று இடை மிகும்— (கெட்ட வழி இனவொற்றாய் ஓர் தகர) ஒற்று இடை மிக்கு முடியும்.

உ-ம்:—ஒருபத்தொன்று, இருபத்தொன்று; ஒருபத்திரண்டு, இருபத்திரண்டு; ஒருபத்துமூன்று, இருபத்துமூன்று என ஒட்டிக்கொள்க.

'நின்ற' என்றதனான், மேல் ஒரு பதிற்றுக்கலம் என்னும் முடிபிற்கு இன்பேறும் கொள்க. [ஏகாரம் ஈற்றசை.] (சுக)

சஎசு. ஆயிரம் வரினே யின்னென் சாரியை
ஆவயி னொற்றிடை மிகுத லில்லை.

இஃது, அவ்வடையடுத்த பத்தினோடு ஆயிரத்தினைப் புணர்க்கின்றது.

இ-ள்:—ஆயிரம் வரின் சாரியை இன் ஆம் - (அவ்வொன்று முதலாகிய பத்தூர் கிளவி முன்) ஆயிரம் என்பது வரின் இடை வந்து புணருஞ்சாரியை இன் ஆம். அவயின் ஒற்று இடை மிகுதல் இல்லை - அவ்விடத்து (முன் கூறிய) ஒற்று இடை மிகுதல் இன்றி முடியும்.

உ-ம்:—ஒருபதினாயிரம், இருபதினாயிரம் என ஒட்டுக.

'அவயின' என்றதனான், ஒருபதிற்றுக்கலம் என்னும் முடிபிற்கு உகரமும் வல்லெழுத்துப் பேறும் கொள்க. [வகாரம் அசை. ஆகாரம் செய்யுள் விகாரம்.] (எ0)

சஎஎ. அளவு நிறையு மாயிய றிரியா.

இஃது, அவ்வொன்று முதலாகிய பத்தூர் கிளவி முன் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் முடியுமாறு கூறுகின்றது.

இ-ள்:—அளவும் நிறையும் அ இயல் திரியா - (அவ்வொன்று முதலாகிய பத்தூர் கிளவிமுன்) அளவுப்பெயரும் நிறைப்பெயரும் (மேல்) ஆயிரத்தோடு புணரும் வழி முடிந்த இயல்பில் திரியாதே நின்று இன்பெற்று முடியும்.

உ-ம்:—ஒருபதின்கலம், இருபதின்கலம்; சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு எனவும்: ஒருபதின்கழஞ்சு, தொடி, பலம் எனவும் கொள்க.

'திரியா' என்றதனான், ஒருபதிற்றுக்கலம் என்னும் முடிபிற்கு இன்னின்னகரம் இரட்டிய றகரமாகலும், ஒருபதினாழி என்னும் முடிபின்கண் வருமொழி நகரம் திரிந்தவழி நிலைமொழியின் னகரக்கேடும் கொள்க. [ஆகாரம் செய்யுள் விகாரம்.] (எக)

௪௭௮. முதனிலை யெண்ணின்முன் வல்லெழுத்து வரினும்
ஞ ந ம தோன்றினும் யவவந் தியையினும்
முதனிலை யியற்கை யென்மனார் புலவர்.

இஃது, ஒன்று முதல் ஒன்பான்களோடு பொருட்பெயரைப் புணர்க்கின்றது.

இ-ள்:—முதல்நிலை எண்ணின்முன் வல்லெழுத்து வரினும் ஞ ந ம தோன்றினும் ய வ வந்து இயையினும் - முதனிலை எண்ணாகிய ஒன்று என்னும் எண்ணின் முன் வல்லெழுத்து முதன்மொழி வரினும் ஞ ந ம க்களாகிய மெல்லெழுத்து முதன் மொழி வரினும் ய வ க்களாகிய இடையெழுத்து முதன் மொழி வந்து பொருந்தினும் முதல்நிலை இயற்கை என்மனார் புலவர் - அவ்வொன்று முதல் ஒன்பான்கள் முன் எய்திய முடிபுநிலை எய்தி முடியும் என்று சொல்லுவர் புலவர்.

எனவே, வழிநிலை எண்ணாகிய இரண்டு முதலாகிய எண்கள் அம் முதனிலை முடிபாகிய விகாரம் எய்தியும் எய்தாதும் இயல்பாயும் முடியும்.

உ-ம்:—ஒருகல்; சுனை, துடி, பறை, ஞாண், நூல், மணி, யாழ், வட்டு எனவரும். இருகல், இரண்டுகல்; சுனை, துடி, பறை, ஞாண், நூல், மணி, யாழ், வட்டு என ஒன்பதின் காறும் ஒட்டுக.

ஒன்பதின்கல் எனச் சென்றதேனும் வழக்கின்மையின் ஒழிக்க.

'நிலை' என்றதனான், மாட்டேற்றுக்கு வலாத ஞகர யகரங்களின் முடிபு கொள்ளப்பட்டது. (௭௨)

௪௭௯. அதனிலை யுயிர்க்கும் யாவரு காலையும்
முதனிலை யொகர மோவா கும்மே
ரகரத் துகரந் துவரக் கெடுமே.

இஃது, ஒன்று முதல் ஒன்பான்களோடு பொருட்பெயருள் உயிர் முதன்மொழி முடியுமாறும் மேற்கூறிய யகரம் வேறுபட முடியுமாறும் கூறுகின்றது.

இ-ள்:—அதன் நிலை உயிர்க்கும் யா வருகாலையும் முதல்நிலை ஒகரம் ஓ ஆகும் - அவ்வொன்று முதல் ஒன்பான்களோடு புணருமிடத்து உயிர் முதன்மொழி வந்த இடத்தும் யா முதல்மொழி வந்த இடத்தும் முதனிலை எண்ணாகிய ஒன்று என்பதன் கண் ஒகரம் ஓகாரம் ஆம். ரகரத்து உகரம் துவரக்கெடும் - (அவ்விடத்து) ரகரத்து உகரம் முற்றககெட்டு முடியும்.

எனவே, வழிநிலை யெண்களுள் உயிர்நிலை முதன்மொழி வந்த இடத்து முன் கூறியவாறே இருவாற்றானும் முடியும்.

உ-ம்:—ஒரடை, ஓராடை எனவும்; இருவடை, இருவாடை, இரண்டடை, இரண்டாடை எனவும் உயிர் முதல் மொழிகளை ஒட்டிக்கொள்க.

யா முதல்மொழி ஓர் யாழ் எனவரும்.

'துவர' என்றதனான், இரண்டு என்னும் எண்ணும் மூன்று என்னும் எண்ணும் செய்யுளகத்து ஈரசை எனவும் மூவசை எனவும் முதல் நீண்டு வேறுபட முடியுமாறு கொள்க.

'அதனிலை' என்றதனான் முதனிலை நீளாதே நின்று உகரம் கெட்டு ஒரடை, ஓராடை, ஓர்யாழ் எனவரும் முடிபும் கொள்க. [ஏகாரங்கள் ஈற்றசைகள்.] (௭௩)

சஅ௰. இரண்டுமுத லொன்பா னிறுதி முன்னர்
வழங்கியன் மாவென் கிளவிதோன்றின்
மகர வளபொடு நிகாலு முரித்தே.

இஃது, இரண்டு முதல் ஒன்பான்கள் முன்னர் அளவு முதலிய மூன்றற்கும் உரிய மா என்பது புணருமாறு கூறுகின்றது.

இ-ள்:—இரண்டு முதல் ஒன்பான் இறுதி முன்னர் — இரண்டு முதலாக ஒன்பது ஈறாகச் சொல்லப்படுகின்ற எண்களின்முன்னர், வழங்கு இயல் மா என் கிளவி தோன்றின் — வழக்கின்கண்ணே கிடக்கின்ற (விலங்கு மரம் முதலிய அல்லாத அளவு முதலியவற்றிற்குரிய)மா என்னும் சொல் தோன்றின்,மகர அளபொடு நிகாலும் உரித்து - (இயல்பாய் முடிதலேயன்றி மேற் கூறிய) மண்டை என்னும் அளவுப்பெய ரோடு ஒத்து வேறுபட முடிவனவும் பெறும்.

உ-ம்:—இரண்டுமா, இருமா; மூன்றுமா, மும்மா; என ஒன்பதின்காறும் இவ்வாறு ஒட்டுக.

இரண்டு முதல் ஒன்பான் என்று எடுத்தமையின், ஒன்றற்கு ஒருமா என்னும் முடிபேயன்றி ஒன்றுமா என்னும் முடிபு இல்லையாயிற்று. இவற்றுள், மிக்க எண் ணோடு குறைந்த எண்வருங்கால் உம்மைத்தொகையாகவும், குறைந்த எண்ணோடு மிக் கது வரிற் பண்புத்தொகையாகவும் முடித்தாரென்க. ['ஏகாரம்' ஈற்றசை.] (எச)

சஅக. லனவென வரூஉம் புள்ளி யிறுதிமுன்
உம்முங் கெழுவு முளப்படப் பிறவும்
அன்ன மரபின் மொழியிடைத் தோன்றிச்
செய்யுட் டொடர்வயின் மெய்பெற நிலையும்
வேற்றுமை குறித்த பொருள்வயி னான.

இது, லகார னகார ஈற்றுச் செய்யுள் முடிபு கூறுகின்றது.

இ-ள்:—ல ன எனவரும் புள்ளி இறுதி முன் - ல ன என்று சொல்ல வருகின்ற புள்ளியீற்றுச் சொல்முன், உம்மும் கெழுவும் உளப்பட பிறவும் - உம் என்னும் சாரி யையும் கெழு என்னும் சாரியையும் உளப்படப் பிற சாரியையும், அன்ன மரபின் மொழியிடைத்தோன்றி செய்யுள் தொடர்வயின் மெய் பெற நிலையும் — அப் பெற்றிப் பட்ட மரபினையுடைய மொழியிடைத் தோன்றிச் செய்யுள் மொழிகளைத் தொடர்ந்து சொல்லும் இடத்து மெய்ம்மைபெற நிலைபெற்று முடியும். வேற்றுமை குறித்த பொருள் வயின்—வேற்றுமை குறித்த பொருட்புணர்ச்சிக்கண்.

உ-ம்:—"வானவரி வில்லுந் திங்களும், கல்கெழு கானவர் நல்குறு மகளே" என வும்; "மாநிதிக் கிழவனும் போன்ம்" எனவும்; "கான்கெழுநாடு" எனவும் வரும்.

'மொழியிடைத் தோன்றி' என்ற மிகையால், பிற ஈற்றுள்ளும் இச்சாரியைபெற்று முடிவன கொள்க. துறைகெழு மாந்தை, வளங்கெழு திருநகர் எனவரும்.

'அன்னமரபின்' என்றதனால், சாரியை காரணமாக வல்லெழுத்துப் பெறுதலும், அது காரணமாக நிலைமொழியீறு திரிதலும், சாரியையது உகரக்கேடும், எகர நீட்சி யும் கொள்க. பூக்கேழூரன், வளங்கேழ்திருநகர் என்று அவ்வாறு வந்தமை யறிக.

'மெய் பெற' என்றதனன், இச்சாரியைப் பேற்றின்கண் ஈற்று வல்லெழுத்து வீழ்க்க. ['ஆன்' இடைச்சொல், அகரம் சாரியை.] (எரு)

சஅ௨. உயிரும் புள்ளியு மிறுதி யாகிக்
குறிப்பினும் பண்பினு மிசையினுந் தோன்றி
நெறிப்பட வாராக் குறைச்சொற் கிளவியும்
உயர்திணை யஃறிணை யாயிரு மருங்கின்
ஐம்பா லறியும் பண்புதொகு மொழியும்
செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின்
மெய்யொருங் கியலுந் தொழிறொகு மொழியும்
தம்மியல் கிளப்பிற் றம்முற் றாம்வரூஉம்
எண்ணின் றொகுதி யுளப்படப் பிறவும்
அன்னவை யெல்லா மருவின் பாத்திய
புணரிய னிலையிடை யுணரத் தோன்றா.

இஃது, இவ்வதிகாரத்துப் புணர்க்கப்படா மொழிகள் இவை யென அவற்றை எடுத்து உணர்த்துகின்றது.

இ-ள்:—உயிரும் புள்ளியும் இறுதியாகி குறிப்பினும் பண்பினும் இசையினும் தோன்றி நெறிப்பட வாரா குறைச்சொல் கிளவியும் — உயிரெழுத்தும் புள்ளியெழுத்தும் ஈறாகிக் குறிப்பின்கண்ணும் பண்பின்கண்ணும் இசையின்கண்ணும் தோன்றி ஒரு நெறிப்பட வாராக் குறைச்சொற்களாகிய உரிச்சொற்களும், உயர்திணை அஃறிணை அ இரு மருங்கின் ஐம்பால் அறியும் பண்பு தொகு மொழியும்—உயர்திணை.அஃறிணை யாகிய அவ்விரண்டு திணையிடத்தும் உளவாய ஐந்து பாலினையும் அறியவரும் பண்புத்தொகை மொழிகளும், செய்யும் செய்த என்னும் கிளவியின் மெய் ஒருங்கு இயலும் தொழில் தொகு மொழியும்—செய்யும் செய்த என்னும் பெயரெச்சச் சொற்களின்படி ஒருங்குநடக்கும் வினைச்சொல் தொக்க வினைத்தொகையும், தம்இயல் கிளப்பின்—(எண்கள்) தம்இயல்பு கிளக்கும் இடத்து,தம்முன் தாம் வரும் எண்ணின் தொகுதி உளப்பட பிறவும் அன்னவை எல்லாம்—(நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியுமாய் வாராது) தம்முன் தாம் வரும் எண்ணின் தொகுதியும் உட்பட்ட பிறவும் அத்தன்மைய வெல்லாம், மருவின் பாத்திய—வழக்கிடத்து மருவிநடந்த இடத்துள்ளன. (ஆகலான் அவ்வாறே கொள்ளப்படும்.)புணர்இயல் நிலையிடை உணரத்தோன்றா-புணர்ச்சிஇயன்ற நிலைமைக்கண் (அவற்றின் முடிபு) விளங்கத் தோன்றா.

உ-ம்:—விண்விணைத்தது, கார்கறுத்தது, ஒல்லொலித்தது இவைகுறைச்சொற் கிளவி ஆயினமையின் முடிக்கப்படாவாயின; விண்ணென விசைத்ததென இடைச்சொல்லோடுகூடிய வழிப்புணர்க்கப்படும்.

கருஞ்சான்றான் என்றது பண்புத்தொகை. இது கரும் என பண்புணரநின்றது. கருஞ்சான்றானெனத் தொகையாயவழி கருமென்பது கரியானெனப் பால்காட்டி நிற்றலில் புணர்க்கப்படாதாயிற்று.

கொல்யானை என்றது வினைத்தொகை. அதுவும் கொல்லெனத் தொழின்மை உணரநின்றது. கொல்யானை எனத் தொகையாயவழி, கொன்ற எனக்காலம் காட்டி நின்றமையின், புணர்க்கப்படாதாயிற்று.

ஓரொன்று என இது தம்முற்றாம் வந்த எண். இது நிறுத்த சொல்லும் குறித்து

வருமொழியும் [illegible] வேறுபடாதாயிற்று. இது [illegible] யொடு என்புழிப் புணர்க்கப்படும்.

"பிறவும்" என்றதனுன் முடியாதன உண்டான், கரியன் என்புழி இலக்கண [illegible] கருமை எனவும் பிரித்து [illegible] வழி ஆகும் அன்னும் குறித்தவருமொழி [illegible] புணர்க்கப்படாவாயின.

[illegible] கொள்ளெனக்கொண்டான் என்புழிக் கொள்ளென்ப [illegible] புணர்க்கப்படாமைகொள்க.

[illegible] ஒருமியலும் என்றதனன், உண்டான் என்புழிச்செய்தையும் காலமும் [illegible] பிரித்துப் புணர்க்கப்படாமை கொள்க. (அகரச் சுட்டின் [illegible] செய்யுள் விகாரம்). (௪௬)

௪௮௩. கிளந்த வல்ல செய்யுளுட் டிரிநவும்
வழங்கியன் மருங்கின் மருவொடு [illegible]
விளம்பிய வியற்கையின் வேறுபடத் தோன்றின்
வழங்கியன் மருங்கி னுணர்ந்தன ரொழுக்கல்
நன்மதி நாட்டத் தென்மனார் புலவர்.

இஃது, இவ்வதிகாரப் புறனடையுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:— கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும் - முன் எடுத்தோதின அல்லாதன செய்யுளிடத்து வேறுபட வருவனவற்றையும், வழங்கு இயல் மருங்கின் மருவொடுதிரிநவும் — வழக்கு நடக்குமிடத்து மருவுதலோடு வேறுபட வருவனவற்றையும், விளம்பிய இயற்கையின் வேறுபடத்தோன்றின் — முன் சொன்ன முடிபியற்கையின் வேறுபடத்தோன்றின், நல்மதி நாட்டத்து வழங்கு இயல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல் - நல்லறிவினது ஆராய்ச்சியான் வழக்கு இயலுமிடத்து அவற்றின் முடிபு வேறுபாடுணர்ந்து நடத்துக, என்மனார் புலவர் — என்று சொல்லுவர் புலவர்.

உ-ம்:—நறவங்கண்ணி, கள்ளியங்கோடு, புன்னையங்கானல், பொன்னங்கிரி, [illegible] கண்ணி, காலம் பெருந்துறை என இவை வேற்றுமைக்கண் அமமுப் பெற்று முடிந்தன.

"வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரலிசை" என்பது ஈகார வீறு அத்துப் பெற்று முடிந்தது. முளவுமா, பிணவுநாய் என்பன அவ்வழிக்கண் மென்கணத்து குறியதன் இறுதிச் சினைகெட்டு உகரம்பெற்று முடிந்தன.

"அகத்தெனை நிறைய மந்திரங் கூறி" என்பது அகம் என்னும் நிலைமொழி [illegible] என்னும் வருமொழியோடு வேறுபடமுடிந்தது.

'ஆயிடை' என்பது அவ்வென்னும் வகரவீறு வேறுபடமுடிந்தது.

கடவுத்திரை, நடவுத்தோன், என்பன உரிச்சொல் முடிபு.

அருமருந் தன்னன் என்றபாலது அருமருந்தான் என மருவாய முடிபு [illegible] சோணாடு மலாடு என்பதும் அது.

பாண்டி [illegible] தும் அது. பிறவும் அன்ன. (உணர்ந்தனர் என்பது இறந்தகால [illegible] வினையெச்சம்.)

ஒன்பதாவது குற்றியலுகரப் புணரியல் முற்றிற்று.

எழுத்ததிகாரம் இளம்பூரணருரை முற்றுப்பெற்றது.